திகன்முழங்கித்தணியானாகிப், பொத்துநெடுஞ்சமர்க்களத்திற் பொருந்தலர்போரணியுடைத்துப்பொருவானெண்ணி, மத்தம திகொடுபிடகநூனெறிவன்படையினணிவகுத்தல்செய்தான். ()

இன்னவகைபகர்ந்தவிவைநான்கல்லாற்பொருளிவையாயிருக் கவான்மா, மன்னியவிண்காலந்திக்கிறையுமுளவெனச்சிலர்தாம் வகுத்தலென்னே, யுன்னியிடின்மதுவுண்டோவுன்மத்தம்பிடித் தேயோவுணர்கிலோமா, லன்னவையுமின்னவையாலகற்றுவன் யான்காண்டிரெனத்தாண்மையென்றான். (௧௫)

அறிவுயிர்க்குளதென்னிற்பொறிபுலனாலொன்றையறித ல்வேண்டா, *வறிதரொட்டுத்தீண்டியணைந்தறியுமெனிலிருளினி றமறியாதாகு, மறிவதிலைபொறியிலையேலெனினுயிருக்கறிவிலை யைம்பொறியும்பற்றி, யறியுமறிவுளதென்னிலந்நினுமோரறி வாகவறிதல்வேண்டும். (௧௬)

சார்ந்தறியுமொன்றையறிவெனினீயுமொருபுத்தன்றாறுமென்ப தோர்ந்தறிதியதுகிடக்கஞானஞேயங்களன்றியுளதாமான்மாத்[ற் தேர்ந்தறியினறிவோமற்றறிவன்றேலென்றாகிற்செடமாமண்போ கூர்ந்தறிவேற்பருப்படிசிற்கதுவேசிற்றுண்டியெனக்கூறலாமே.

உயிரதனையருவென்னினுருவதனைத்தாங்கியருவுற்றதில்லா, து யிரதனையுருவென்னினுடலினுக்குளுடலடங்கியொடுங்கமாட்டா துயிரதனையணுவென்னினுடலிடத்துப் பலதுளையுண்டோடிப் போமா, லுயிரதனைவித்தமென்னினுதயாத்தமனமறிவுக்குளவா காவே. (௧௮)

எங்குநிற்குமென்னினுடலொறாறும்பேதப்படுகையினாலெங்கு மின்றாந், தங்குமுற்றவுடலேறாதிறைநற்றன்னினுடைமையதாயச் சாயு, மங்குமுற்றேரிடத்துறையுமென்னினிழைமுடிகாணுமறிவின் றாமாற், பங்குமுற்றாதிற்பதன்றியிப்படையைப்படைகொடுதீப்படு ப்பையன்றே. (௧௯)

தொழிற்குவராமையின்வானென்றன்றிலையெப்பொருள்க ளையுஞ்சமக்குமென்னில், விழிக்குவராதிரவையுமேற்கொண்டுச மப்படுதங்ஙன்வினவிறேறைக், கொழிப்படுநிலாக்காரணமென்று ரைத்தனையேலதுபகரினுருவின்கூட்டங், கழிப்படுநிலாவெங்குநின் றதெனிலெங்குமென்படதொன்றுகண்டதின்றே. (௨௦)

---

* அறிவதொட்டி எனவும் பாடம்.

காலமென்பதென்னையெனிற்படைத்தளித்துப்போக்குவது
காணொன்றேயேற், சீலமென்பதொருபொருளைச்சேர்ந்துளதால
தன்பின்னர்ச்செறிவதின்றாந், தூலமென்பதுனதுமதிபொருளி
யல்பாலவ்வினைகடுன்னுமிந்த, ஞாலமென்பதுன்மதிமற்றில்வழு
க்கேகாலமெனநவிற்றுங்காலே. (௨௧)

எனக்கொருவன்மேற்கிருந்தாலென்பாலைக்கிழக்கென்னவியம்
பல்செய்வா, னெனக்கொருவன்கிழக்கிருந்தாலென்பாலைமேற்
கென்னவியம்பாநிற்ப, னெனக்கொருவன்கூறியவாறியம்புதல்
கூடாதிருவேறியற்கையான்மற், றெனக்கொருவனெதிராகத்தி
க்குளதென்றுரைப்பதெவ்வாறில்வழுக்கே. (௨௨)

உலகதனையிறைபடைத்தானென்றனையேலுள்ளதையுண்டா
க்கவேண்டா, வுலகதனையில்லதெனினுண்டாக்கக்கூடாதாலுபா
தானந்தா,னுலகதனுக்குளதுகாரியமாமுருவனையவுருவமாக
வுலகதனைப்படைத்தனனென்றாலு முளதிலதற்குமுண்டாமன்
றே. (௨௩)

உள்ளதனைக்கடம்போலப்படைத்தனனேலெவ்விடைநின்று
ஞற்றல்செய்தான், வள்ளலவனுலகினுக்குமேலாகினின்றுலகை
வகுத்தானென்னில், விள்ளுமிடத்துலகுமுன்னேயுண்டானதா
மெங்குமேவிநின்று, தள்ளரியவுலகதனைத்தந்தனனேலெங்குமு
ன்புகுந்ததாமே. (௨௪)

இல்லதனைக்கருணையினாற்படைத்தனனேற்பாம்புபுலியானி
யாதி,கொல்லுமவைபடைத்திடுதல்கூடாதுதன்வலியாற்குறித்த
வெல்லாம், வல்லவைகைபடைப்பனெனிற்பிந்தனைபடைத்தநனு
ல்வரும்பேறேதிற், புல்லும்விளையாட்டெனிற்சிறுகுழவியிறை
வனெனப்புகல்வரன்றே. (௨௫)

கருமத்தாற்படைத்தனனேற்கருமமியற்றாரைமுன்புகாணல்
வேண்டு, மொருமைத்தாயறியுமிடத்துலகமெல்லாமனாதியதே
யுண்மையாகும், பெருமைத்தாமுருவினனேலவ்வுருமுன்படைத்
தானைப்பெறுதல்வேண்டு, மருமைத்தாமவ்வுருவுமிச்சையினாலெ
னினுலகுமதனாலுண்டாம். (௨௬)

இச்சையிறைக்குலகினுக்குக்கருமமென்னினுருவங்களைவை
க்குங்கன்ம,நிச்சயமாமருவாமேல்வானமெனப்பவக்கடலினீக்க
மாட்டான்,வைச்சநிழல்போன்றுளனேலறிவிறைவற்கின்றறிவு

வந்தோற்காகு, மெச்சுமறிவுளனென்னி னுருவேண்டுமின்றுகின் மேவானன்றே. (௨௭)

எம்முடையவேதங்களாதியாயிறைவனுண்டென்றியம்புமென்னி, னம்முடையவேதங்களுரைப்பவனாயில்லாமனுவுரைத்தனன்றுஞ், செம்மைபெறவிறைவனோனாலறிந்தோனாலனுற்றெரிந்தோமென்னி, னம்மவிதாயுதமையிவ்வாறுரைப்பதற்குரியலாலார்வல்லாரே. (௨௮)

மரமாதியுற்பிசமுப்பிரின்றிப்பூதவுருவாய்த்துமல்கிக், குரமாதியெனத்தோன்றியண்டசமாதிக்குதவிகூர்த்துமாயு, மொருகாலுங்கொலையாகா தூண்வேண்டிற்கொன்றதுகொண் டுண்ணாருந்தரைமீதுமாண்டதெல்லா மண்ணினுக்குதிகரென்பர்தக்கோரன்றே. (௨௯)

சீதநீர்வைத்தவருக்கறமதனையுண்டவர்க்குச்செறியாதவ்வாரேருதிஞானுண்டவர்க்குப்பாவமின்றுகொன்றவருக்குறுவதாகுமாதலானருந்தவாசையுண்டேற்செத்ததுண்ணலாகுமிந்நீதியார்மறுத்துரைப்பாருனக்கூறாட்டாதார்நினைவிலாரே. (௩௦)

உருவம்வேதனைகுறிப்புப்பாவனைவிஞ்ஞானமெனவுரைத்தவைந்து, மருவியேசந்தானத்தாற்கெடுதல்பந்தமுக்கமற்றவ்வைந்தும், பொருவிலாவகைமுற்றக்கெடுதன்முத்தியின்பமுன்புகன்றவைந்தின், விரிவெலாந்தொகுத்துரைத்தமெய்ந்நூலிற்றெரித்திரிவைமெய்ம்மையென்றான். (௩௧)

இன்னன * சாதனங்கள்பலதொடுத்துமடுத்தடுத்திகலியிருதோள்கொட்டித், துன்னியபோர்த்தொழிற்கடுத்தசவுத்திராந்திகனெழுந்ததோற்றநோக்கி, யன்னவனையிக்களத்திலடுவனெனத்தார்க்கிகர்கோனழன்று சீறி, மன்னியபல் வகையுத்திவன்படைகொண்டக்களத்தில்வாய்விட்டார்த்தான். (௩௨)

ஷை வேறு.

முழுதையுங்கண்டான்புத்தனென்றனைமுடிவின்றுமான்
முழுதையுங்காணமாட்டாரென்றென்றுமுழுதுங்காணின்
முழுதையுமுடிவிலாதனென்றிடேன்முழுஞானத்தான்
முழுதையுங்காணின்ஞானமுடியுமோர்கணத்தினன்றே. (௩௩)

வீடுகண்டறங்கள்சொன்னனெனின்முற்றும்விளிந்தோன்மீண்டு
பாடுதல்சமனுந்தனைப்பருகியோன்மாய்ந்துவந்து

* சாதகங்கள் எனவும் பாடம்.

நாடுமினிதுதீதாகுமென்பதாநலிவுபின்பே
லாடுமீரளவைகாணுனக்கரைக்கேற்றல்போலும். (௩௪)

பரதுக்கதுக்கனுகிற்பதிதனையிழந்தமாதர்
விரகத்தித்தனக்குங்காட்டில்வேட்டமேற்கொண்டுளோர்க்குங்
கரவிற்கைப்பொருள்கொண்டேகுங்கள்வர்க்குங்கசிந்துசோர்த
றரையிற்றக்கதுமற்றன்றோதருமமீதழகிதாமால். (௩௫)

அங்கொருபொருளைத்தேடியதற்குரைதேடுமுன்ன
மங்குமுன்னறிவுநூலென்வழிவழிதோன்றுமாகி
லெங்குளதாகும்வேறுயிசைத்ததேதயிசைப்பதின்றிப்
பங்கமுற்றெழும்வேறென்னிற்பாலருன்மத்தர்சொல்லே. (௩௬)

முதனடுவிறுதிதம்மின்முரணுவதின்றிப்பாரோர்க்
கிதமுறப்புகன்றநூலேயாவரும்பயினூலாம்
புதன்மகன்போலப்பேசும்புத்தகேள்பொன்றினாறு
விதவிதமாகுமுன்னூல்வீசுமுந்நூலாமன்றே. (௩௭)

முந்தையேயறங்களாற்றிமுற்றுணர்ந்தருளினாலே
யெந்தைநூனுரைத்தான்முத்தியாவருமெய்தவென்று
யுந்தைபோறங்கள்செய்யவுரைத்தநூல்யாவன்சொற்ற
நந்நூலவனைப்போல்வானெனிலனவத்தையாமே. (௩௮)

ஆதலாலுனதுபாழியமர்ந்திடும்புத்தனாரொன்
றேதுவாயினூல்சொன்னேனுறைபவனென்னிலன்றே
றாதனுயிருந்தபுத்தனயந்தெவ்விடமுனக்குப்
போதகனடைவுமின்றுபுகன்றநூலடைவுமின்றே. (௩௯)

உன்னிறைபொன்றக்கெட்டேயொழிந்தனனாகிலாரை
யென்னிடர்களைதியென்றுவிறைஞ்சுதியிறந்தோர்க்கீண்டுப்
பின்னவர்செய்தகன்மம்பேறுசெய்தவர்க்கீந்தாற்போ
னன்னலந்தருமாலென்றானவில்வையேனவிலக்கேண்மோ. (௪௰)

ஆருயிர்நித்தமாகுமாதலாற்பலிக்குங்கன்ம
மோர்தருபலத்தைநல்குமித்தனுமொருவனுண்டாற்
சீர்தருந்தீபம்பொன்றத்திரியுடனெய்யுங்கூட்டு
வோர்செயலுனதுசெய்கையுன்னறிவழகிதாமே. (௪௧)

பனுவல்கொண்டதுமானத்தாற்பகர்ந்தவன்றனைத்தேர்ந்தாற்
போற், பனுவல்கொண்டுரைத்தவெல்லாப்பதார்த்தமுமேதுமான

த்தாற், பனுவல்கொண்டறிவதென்னிற்பரலோகபாதாளங்கள்
பனுவலொன்றுரைத்த*துண்டேற்பகருதிபகர்ந்ததின்றே. (௩௨)

பொருளெல்லாமனித்தமென்றாய்புகன்றதில்லதற்கோவன்றி
யுரைசெயுள்ளதற்கோவேறாயுளதிலதானதற்கோ
தெருளினில்லதனுக்கின்மைசெப்புவதென்னைபின்னை
மருளினுள்ளதற்கென்றாயேன்மற்றதுமாய்ந்திடாதே. (௩௩)

உளதிலதானதற்கேலுளதிலதாகாதில்லை
துளதெனவுதிக்கமாட்டாதுறுவதிங்கெவற்றுக்கென்னி
லுளதிலதன்றித்தோன்றுமொருபொருளின்றுமாய்வ
துளதுமற்றிதனைநீயுமுணர்விலுணர்ந்துநோக்கே. (௩௪)

உடல்பூதமென்னிலொன்றாவொன்றொடொன்றிகலுமாற்றா
லுடனுறுசுக்கிலத்தோடுதிரமேற்கல்விற்றேறை
யுடலொடுவருமாறென்னேயுரையிருவினைகாணென்னி
லுடல்வேறுவேறாய்த்தோன்றுமுபாதானமவையேபோல. (௩௫)

அன்னமேலுண்ணவுண்ணவதிகமாய்வளருங்காய
முன்னுவாயுணர்வாமென்னிலுணர்வருவுருவமாகித்
துன்னசேதனமாகாதாற்றோன்றுமில்லதுமற்றென்னிற்
பன்னுவாய்ககனத்தூடுபங்கயமலருமென்றே. (௩௬)

உருப்பூதவுபாதானங்களுறுஞ்சத்தாட்டகமேற்காற்று
நெருப்பொடுபுனல்பார்மன்னிநிலைபெறுமிரதங்கந்தம்
வரப்போவதில்லைநீக்குவளிநீர்மண்சுவைநாற்றந்தான்
றரப்போமேநீர்க்குவாயுத்தழல்பார்வாசனையுமின்றே. (௩௭)

புந்திசெய்பாரினுக்குப்புனல்கனல்வளியுமில்லை
யிந்தியவிடயமாகியியலுறுமாபூதங்கள்
வந்திடுமியல்புந்தேராய்வன்சொற்சேர்தேரநீயோ
ரந்தகன்கொல்லோசொல்லாயறிவின்கேடனதாமன்றே. (௩௮)

அறிவழிந்தறிவையாக்கிலழிந்ததுண்டாக்காதான
வறிவினப்பொருள்கண்மங்களணைந்திடாவாக்கிப்போமே
லறிவிரண்டொருகாலத்தினவ்வகைநிற்கமாட்டா
தறிவறக்கெடாதேனித்தமனித்தமுமறிவிற்காமே. (௩௯)

அவ்வகையதனாலென்றுமனித்தமென்பதுதானின்றுஞ் [ல்
செவ்விதிற்கெட்டுப்பின்னர்ச்செனிப்பிக்குமெருப்போலென்னி

* உண்டோ எனவும் பாடம்.

வெவ்விதிற்கெடாதுசத்திமேவுமால்வினைவும்வேறுங்
கவ்வையிற்கலங்கினையேற்கலக்கந்தீர்ந்ததன்பின்சொல்லே.(௫௦)

அழிவுறுச்சந்தானத்தாலறிவுண்டாமெனிற்சந்தான
மழிவுறுநித்தமாகுமாற்றுநீர்போன்றழிந்தா
மழிவுறுதறிவொழுக்கேலாற்றிடும்பொருள்போமாபோ
லழிவுறுவுருவமாதியவ்வறிவுடன்போமன்றே. (௫௧)

நின்றறிவுடனெய்தாவாரீத்தமுன்னொழுகிமாயா
தொன்றியேபெருகியோடுமுணர்வுமப்படிநிறைந்தே
சென்றிடல்வேண்டுங்தேராத்தேரநீதேர்ந்துபார்த்து
மன்றமற்றிதனுக்குண்டேன்மறுகணைவழங்குவாயே. (௫௨)

உருவாதியைந்தின்கூட்டமொருவன்வேறில்லையென்னி
னுருவாதியுணர்ந்தோன்யாவனுணரும்விஞ்ஞானமென்னி
னுருவாதியுணர்விஞ்ஞானமுணர்பவனியாவன்றீப
முருவாதியுடனேதன்னையுணர்த்துமற்றதனையேபோல். (௫௩)

உணர்வுணர்வினையுமற்றையுருவாதியவையுங்காட்டி
யணைதருமெனிற்றீபத்தோடதுகாட்டுமவையுங்காணுந்
தணவறுமுலோசனம்போற்றரும்பொருளுணர்வுகாணு
மிணையதுமொருவனுண்டாலேழைநீயிதனைத்தேறே. (௫௪)

உடல்பொறிமனநானென்றேயோதுவாயுறக்கந்தன்னி
னுடனுணராதவாயினுணர்ந்திடாவொன்றையொன்று
முடனுறுவாயுமோராவொருவனைத்தழியுமாற்று
னுடலமுக்காலச்செய்தியுணருமோமனமுற்றன்றே. (௫௫)

ஆதலாலறிவாய்க்காயமாதிமூன்றையுமறிந்து
பேதநானிவற்றுக்கென்றும்பெற்றியுமறிந்துள்ளத்தா
லேதமில்பொருளைநாடியிந்தியத்திசைத்துப்பின்னை
ரோதுகாயத்தாற்செய்தியுஞற்றுவதான்மாவாமே. (௫௬)

இறந்திடுமறிவேபின்னும்யானறிந்தேனென்றுன்னி
லறிந்தவவ்வறிவாமென்றாலன்றுரைத்தநீதானின்று
முறும்பரிசுரைத்தனென்றுனுரைத்ததுவாயோவேறுப்
பெறுந்தகையுளனலந்தப்பெற்றிமற்றதுவேபோல. (௫௭)

மனம்பொறியெல்லாங்கொண்டுமற்றுநானறிந்தேனென்னுங்
கனம்பெறுகின்றதான்மாக்காண்டிமுப்பொறியினானு

மூனம்பெறக்கருதிக்கூறிமுடித்திடுந்தொழில்களாற்றி
யினம்பெறுமுணர்வினுக்குமிசைவிடமாமற்றன்றே. (ருஅ)

விருப்பொடுவெறுப்புமற்றைறவினையின்பதுன்பஞானம்
பரிப்பதான்மாவின்பண்புபண்டொருகனியையுண்டோன்
றிருப்பிவேறொன்றுகண்டுதின்றதற்கினமீதென்று
வொருப்படப்பின்னுமுண்ணவுவப்பதவ்விருப்பமாமால். (ருகூ)

இன்னனபிறவுமாகுமிவற்றினைமுன்னும்பின்னு
முன்னுதனூறுதலாலேயொருவனிச்சைபிப்போனுண்டாற்
பின்னநீயிதனுக்கென்னபேசுவைபெரியோரெல்லாம்
பன்னியவாறுமீதுன்படிற்றுரைபகர்ச்சியன்றே. (சு0)

வானியல்புழையாயாவும்வழங்கற்குவழியாய்மற்றுந்
தானிருள்வெளியுமன்றூற்சாற்றுமவ்விரண்டுஞ்சார
வூனமிலிடமாய்ச்சத்தமுறுங்குணமாய்க்காற்றுதி
யானவைதோன்றிமாயவடுத்தலால்விடுத்தலின்றே. (சுக)

காலமாண்டயனமற்றைக்காண்டருபருவமாதி
சீலமாய்மூன்றாய்நன்மைதீமைசெய்திளமைமூப்பு
மேலுமாறியற்றலாலேயெய்துமாலென்றுகோடி
நூலலாநூலங்கோதிநொடித்திடும்பவுத்தநீயே. (சுஉ)

கிழக்கொடுதெற்குமேற்குக்கிளர்ந்திடுவடக்குந்தானாய்
வழக்கினிற்றிரியாதாகிவண்பயன்கொடுக்குமாற்று
விழப்பதெவ்வாறுதிக்குமீண்டுளதென்றுகோடி
மழைக்குரனுணநாளும்வாய்த்திமிலடிக்கவல்லாய். (சுங)

காரியமாகிவையங்காண்டலாற்கடாதியாக்குஞ்
சீரியன்போலவாக்கச்செகத்திற்குமொருவன்வேண்டு
நேரியதருமமாதிநீதியெல்லார்க்குமோதிக்
கூரியவறிவுசெய்திகொடுக்குநூல்கூறல்வேண்டும். (சுச)

வழிவழியறிஞரோதிவருதலாலந்நூன்முன்னே
மொழிபவன்றானும்யார்க்குமுன்னவனாகவேண்டு
மழிவறுகருமசாட்சியாகவுமொருவன்வேண்டு
மிழுதைகேளாதலாலேயீசனுமுளனுமன்றே. (சுரு)

மரமுயிரில்லதென்றாய்வாடலாற்றழைக்குமாற்றாற்
றிரமுயிருள்ளதேயாஞ்சிதநீர்பெறுதும்பெற்றும்

விரவுமாறவ்வாறென்னின்மெலிவொடுவீக்கமூண
னுரைசெயல்சீவனுக்கேயுறுததற்குலகிலின்றே. (௬௬)

ஒருமரக்கொம்புவாங்கியூன்றிறுலதுபோலோங்கி
வருமுயிர்பலவோவென்னின்மரக்கருவித்துக்கொம்பு
திருநுகண்கொடிகிழங்குசெறியும்வேரவற்றுட்சீவன்
புரிவொடுகலந்துகொள்ளும்புத்தநீபுந்திசெய்யே. (௬எ)

தின்றிடிற்குற்றமில்லைசெகுத்ததைதயென்னும்புத்தா
கொன்றதுதின்பாயென்றுகுறித்தன்றேதின்றதாருக்
கொன்றையுங்கொன்றாட்டாராலுன்பொருட்டவர்க்குப்பாவ
மன்றவந்துறுமூனுண்ணன்மறுத்துநீவெறுத்திடாயே. (௬அ)

## கலி விருத்தம்.

ஐங்கந்தமுமுறையாற்கெடலறக்கெட்டிடல்பந்தந்
தங்குந்தனிவீடென்றவன்சபதஞ்சொலுநாவை
யிங்கைந்துமிறந்தாற்கெதியெவற்கென்றிடும்வாளாற்
பங்கம்படவரிந்தானுயர்பழமாமறைதெரிந்தான். (௬௯)

நாவற்றிடப்பட்டுங்கதிநான்சொன்னவையைந்தின்
மேவுற்றவிஞ்ஞானத்தினுக்கெனப்புத்தன்விளம்பத்
தாவித்தநின்விஞ்ஞானமிருதேலதுதன்றே
டோய்வுற்றிடுபிறவும்முளவெனத்தார்க்கிகனுரைத்தான். (எ0)

உயிர்வாளொடுகாலந்திசையுயரீசனுமுளவென்
றியல்வாதினின்றடற்புத்தரின்முன்றோன்றனையிகல்வென்
றயலோரினிவம்மின்னெனுந்தார்க்கீகன்முன்னடுத்தே
வெயிலோனெதிர்பனிசென்றெனப்பிறர்மூவரும்வெகுண்டார்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருக்கொடுமினையவாறுசவுத்திராந்திகனைவென்று
செருச்செய்வார்வருதிரென்னுச்செப்புதார்க்கிகர்கோன்முன்னு
வுருக்கிளர்மூவருக்குளொருமெனயோகாசாரன் [ன்.
பொருக்கெனவிதண்டாவாதப்போர்த்தொழிறொடங்கியார்த்தா

போர்த்தொழிறொடங்கியார்த்துப்போதமேபொருளாய்த்தோ
பார்த்திடிற்போதமாகிப்படுபொருளெழலாற்போதம் [ன்றும்
பேர்த்துவாதனையாற்கூடிப்பிணங்கலால்வடிவின்றுமா
லோர்த்திடிற்கனவுபோலுமுலகறிவுளதென்றேற்றான். (எ௩)

ஏற்றவன் றன்னோடேற்றங்கியம்பியபோதமன்றி
வேற்றுவாதனையுஞ்சொன்னாய்வேறுவேறிரண்டென்றெண்ணாய்
சாற்றுவாதனையும்போதந்தானெனச்சாற்றுவாயேல்
மாற்றுவனதனையென்னுமற்றொருவினையங்கொண்டான். (எச)

வாதனைவிடயத்தோடுமணந்தபினெழுங்கருத்தா
மோதியகனவுகண்டபொருளின்மேலுறுங்கருத்தா
மாதலாலுலகம்வேறேயறிவொடுகனவுமன்றாற்
பேதைநீயென்கொணின்றுபிதற்றுவைபோதியென்றான். (எரு)

பின்னையுமவனைநோக்கிப்பேருலகறிவேயாகி
லன்னியமன்றுமாகவகங்கடமென்னவேண்டு
மென்னநீயுலகந்தன்னையிதம்பிரவஞ்சமென்ப
துன்னுதிபளிங்கேபோலுமுலகமுமுணர்வுமென்றான். (எசு)

தாக்குதற்கமைந்தயோகாசாரன்மேற்சாற்றிப்போக்கு
போக்கருமினையசெஞ்சொற்பொடிப்படும்வழிகண்டில்லை
நாக்கவண்டேக்கிறாக்கநடுங்கினனடுங்கவேடும்
பூக்கமழ்வாகைவேய்ந்தபுயமலைமலிந்ததன்றே. (எஎ)

தடைபிறிதின்றியோகாசாரனைச்சமரின்வென்று
நெடுமொழிபலவுஞ்சொல்லிநிற்குநர்க்கிதன்மேலோங்கும்
விடையெனநடந்துபோந்துவெகுண்டுமாத்திரிகனுங்கோர்
புடையினின்றணுகியேற்றுப்போர்த்தொழில்புரிவதானான். (எஅ)

அங்கமேபொருளாய்த்தோன்றுமங்கனையபுறத்தாற்பின்னை
யிங்குவேறில்லையாமாலிதுபொருளாருமென்னத்
தங்குமாறில்லையாகத்தரும்பொருளறிவுமின்றாய்
மங்குமாலெனுஞ்சொல்லைவென்மார்புறத்தாண்டிடுன்றோ. (எகூ)

படங்கடமவையிரண்டின்பாங்குறுமவையவங்க
ளிடம்படவொன்றினொன்றங்கெய்துருவண்ணங்காத்துத்
திடம்படநிற்பதாகுமவயவிசேர்ந்திரண்டு
முடன்படப்பொருளுமுண்டாமுண்டாகவுணர்வுமுண்டே. (அ0)

பொறிமனமொழியுண்டாயும்பொருள்புணராமையாலே
யறிவுவந்துதிப்பதன்றுமதுவரவறிவுண்டாகிச்
செறிதருஞ்செறியவுண்டாந்திகழ்பொருள்பொருளுண்டாக
நெறிவருமறிவுமெங்ஙனீயெதிர்நிற்றியன்றே. (அக)

இத்திறம்பகரும்வன்சொலிலங்கொளிவாளால்வீசிப்
புத்தன்மார்பெறிந்தவைவேற்போர்ப்படைதுணித்துவீழ்த்திக்
கொத்துலாம்வாகைசூடிக்கோட்புலியெனநின்றான்மேற்
ஙைபத்தபாம்பென்னவேவைபாடிகன்சீறிவந்தான். (அஉ)

வந்தவைபாடிகன்றான்மஞ்சளுநீறுங்கூடச்
சிந்தூரந்தோன்றுமாபோற்செகம்பொருளறிவுகூட
வந்துமாதோன்றுமிவ்வாறுணர்ந்தவருறுவர்வீடென்
றந்தமிலாதபுன்சொலாசுகம்வீசியார்த்தான். (அங)

ஆசுகமதனையயனறிவுகம்புறம்புஞேயம்
பேசுமவ்விரண்டுங்கூடிப்பிறங்குதலின்றாம்பின்னு
நீசொலுமறிவதுடஞேயமுற்றுருவங்கூடா
ஏசியென்னினைந்தாயென்றச்சிறுசொலாற்சின்னஞ்செய்தான். ()

பொங்குமாபோதந்தானேபொருளாய்த்தோன்றிடுமென்றானு
மங்கமேபொருளாய்த்தோன்றுமென்றானுமறிவுமற்றை
மங்குறுப்பொருளுங்கூடவருஞ்சகமென்றானும்போர்
தங்குருகதற்றாந்தார்க்கீகனுக்கெதிர்சமணரேற்றார். (அரு)

புத்தர்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் - கருகூ0.

## ௩௩ - வது, சமணர்வதைச் சருக்கம்.



எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நறைகெழுமரோருகேபணிமென்பீலிநயந்துபாயுடுத்துடைவிடு
த்தும், கறைகெழுமுடைநாறுடலராய் நின்றாண்கையிலுண்டில்
லறந்துறந்த, மறைநெறிதவறுஞ்சமணரினிகண்டவாதியாசீவக
ரென்றும், திறலினிருவரவரின்முன்புகன்றோன்சென்றுதார்க்
கீகன்முன்னெதிர்ந்தான். (க

எதிர்ந்துதார்க்கிகனுக்கெதிர்முகமாகியெலிப்பகைவளராமு
ன்னின், றதிர்ந்ததுபோலச்சிலைசிலைபிதற்றியாதியோடந்தம்வெறு
மிப், பிதிர்ந்ததோர்பசுநாற்போரணிவகுத்துப்பெருநிலம்பரவுநா
ல்வேத, முதிர்ந்தநூலரணமிடிப்பனென்றன்றோன்மொய்யமரிவ்
வணமுயன்றான். (உ)

கடையிலாஞானமுதலவெண்குணமுங்கலைமதிசெந்தழற்றனுமேபோ
லுடையனாய் * ஞானவாணியமாதியோரிருநான்குகுற்றமுந்தீர்ந்
தடையுநானாவற்புதங் களும்பொருந்தியாய்மலரசோகின்கீழொ
ருமுக், குடையினீழலில்வானமரரேத்தெடுப்பக்குலவுமவ்வருக
னெங்கோவே. (௩)

பொறிவழிசெல்லுந்தொடக்கறுத்தொருமுப்பொழுதினுமிக
ழ்வதோர்கணத்தி, லறிவதுபுரிவோன்வழிபடுமவர்க்குமல்லவை
செய்குநர்தமக்கு, முறுவதுசமமேயாகியமனத்தோனென்பதிற்
றிரட்டியாயுள்ள, திறனுறுகுற்றமனைத்தையுந்தீர்ந்தசெல்வனெ
த்தேவுக்குந்தேவே. (௪)

பசித்தருகித்தல்பயஞ்செற்றமுவகைபழிக்குமால்சிந்தனைநரை
நோய், நசித்தல்வேர்விளைப்புமதமியாசித்தனயந்தருசயித்தலாண்
பிறத்தல், முசிப்பிலாதுறங்கலினையமூவாறுமுனிந்துபொன்னெ
யில்வட்டமதன்கண், வசித்தகோனிகலன்வினவனுமொருசொன்
மற்றவன்மனங்கொளவகுத்தான். (௫)

அனையராஞ்சகலாத்தரையிகலாத்தரடுத்தொருசொற்கதம்ப
கவ, னெனவினவுதலுங் கடிப்பிடப்படகமிசைத்தெனவிராகம
தின்றிப், பனவராலங்குப்பிறந்ததாலொருசொற்பஞ்சராத்திமய
மெனவதனால், வினையிலான்சரணநான்குடனுதிவேதமும்விரித்து
ரைத்தனனால். (௬)

ஆண்டவனேதுநூல்களிற்பதார்த்தமையிரண்டுளவவையனாதி
காண்டகுகாலஞ்சீவன்றன்மாத்திகாயமோடதன்மாத்திகாயம்
வேண்டுவதானபுண்ணியம்பாவம்விசும்புபுற்கலம்பந்தம்வீடென்
றீண்டுதலுறுமாலின்னவைபடைப்பதின்றியேயியலுமற்றன்றே.

நின்றிடல் § பேர்தல்போதலென்றினையநிகழ்ச்சியன்மையவெதி
ரேக, மொன்றுதல்புரியுமவை யொருகணத்தினுற்றெழுவதுந்
செயுங்கால, மென்றறிசீவனுறவுதன்காயத்தெல்லையிற்கரும்பி
னிற்சுவைபோ, னன்றுடனாரும்வேறுநாலறிவுநண்ணுமாலென்
னுமாறன்றே. (௭)

---

* ஞானவரணியம் எனவும் பாடம்.

§ பெயர்தல் எனவும் பாடம்.

மிக்கநன்மாத்திகாயமுமதற்குவெதிரேககாயமும்பொருளைத்தொக்கொருகணத்திற்சலித்தலுநிலையுந்துன்னிவித்திடுதலைப்புரியுந், தக்கபுண்ணியநன்றினைத்தரும்பாவந்தருந்தீமைவான்பொருட்கிடமா, யொக்கநின்றிடுமாற்புற்கலப்பொருளினுண்மையாமோதுதாமினியே. (௯)

எங்கணுமணுவாய்ப்பரம்பியெண்ணெய்தியிரும்புபொன்மரமுதலுருவாய்த், தங்கியபொருள்கள்புற்கலமிருமுத்தாவிலாத்தொழில்படுத்துமாகு, மங்கவைகடிந்துதவவினைதொடங்கியமைத்தமுன்னையவினையனைத்து, மங்குதல்புரியும்பொருட்டனுபவித்துமாற்றல்வீடாகுமென்றான். (௧௦)

என்றிவையுகன்றறிகண்டவாதியைத்தன்னிகன்மொழிக்கடியவாள்வீசி, வென்றினிவாகைபுனைகுவனென்றுவெகுண்டழலெழவெதிர்விழித்துக், குன்றெனவெழுந்தகுஞ்சரமஞ்சக்கோளரியேறெழுந்ததுபோற், றன்றிறலறிஞர்தம்பிரான்வியப்பத்தார்க்கிகன்சமர்பொரச்சமைந்தான். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருகனுக்கனந்தஞானமாகியகுணங்கள்யாவு
மருவியபெற்றிநீநமதிக்கடைந்ததுபோலென்றாய்
பெருகியகுற்றமுண்மைபேசிலைசிவவர்க்கத்
தொருவன்மற்றவனுலன்றேற்குற்றமுமுளவாமன்றே. (௧௨)

அறம்புரிந்தனையருற்றமாற்றினனருகனென்னி
லறம்புரிவித்தோன்வேறுமாற்றியவருகன்வேறாந்
திறந்தெரிந்தாலுமென்மேற்சென்றனவத்தாதோடம்
பிறந்திடுமெவன்கொலாநீபேணியவருகனன்றே. (௧௩)

இந்தியத்தொடக்குநீங்கியெவற்றையுமுணர்ந்தானென்னச்
சிந்தனைசெய்தாயன்றேனுன்றேகியேன்மறுதியுண்டா
மந்தவாறல்லனுலினைத்தையுமுணரமாட்டான்
வந்தநேர்கணத்திலெல்லாமதித்திடுமாறுமின்றே. (௧௪)

வழிபடுவார்க்குமாறிமாறுசெய்குநர்க்குநெஞ்சின்
விழைவொடுவெறுப்பின்றாகில்வெற்றுடம்பினனுமற்றும்
பழையபொன்னையில்வட்டத்துப்பார்த்திபர்போலவையந்
தழைவுறப்புரப்பதின்றிச்சார்தற்கோர்பயனுமின்றே. (௧௫)

மனமுதற்பொறிகளில்லான்வசனமொன்றிகலன்கேட்ப
முனமொழிந்திடுவதெங்ஙன்முன்னவனையபின்றேன்
வினவுதல்செய்வதெங்ஙன்விஞவனும்விடுக்குறுநு
நினைவுறுமமர்தம்முணிகழ்த்தியதொக்குமன்றே. (௧௬)

இன்பமாருலகில்வைகுமிகலாத்தர்வந்துநோக்கித்
துன்பமாருலகிலுள்ள துயரறிந்துரைக்கமாட்டா
ரின்பமாருலகின்வைகியெவற்றையுமெய்திலங்குந்
துன்பமாருலகந்தேர்ந்துசொல்லுமாறில்லையன்றே. (௧௭)

உடலிடைநிறைந்துசீவனுறைந்ததேகவிருகூறுக
வுடலினைவகிர்ந்தபோதுமோரிருகூறதாகி
யுடலிடையுறைதல்வேண்டுமுயிரிருகூறாய்வீழ்ந்த
வுடலிடையுறைதலின்மையுணர்திநீயாதலாலே. (௧௮)

கன்னலுஞ்சுவையும்போலுங்காயமுமுயிருமென்னச்
சொன்னதிங்கிசையாதாகுந்தேயமுங்கடமும்போன்று
சின்னமங்குற்றபோதுசீவனுந்தேகத்தோடே
பின்னமங்குற்றுமாயும்பெற்றியாய்முடியுமன்றே. (௧௯)

ஒருபொருடனைமேல்கீழெலாவிதின்றிடவார்போதிற்
றருமிருகாயமென்னிற்சார்ந்திடாதிரண்டுதன்மை
விரிசிறைகால்வண்டிற்குமேற்செலவதியலுண்டேன்
மருவுவதின்றேர்போதின்மற்றவைதனக்குமன்றே. (௨௦)

எண்ணுமோர்கருத்தனுடிப்பிசையுமாறிசைவியாதேனற்
புண்ணியபாவமென்னும்பொசிப்பினைநுகர்வாரில்லை
நண்ணியவாளிபோலநாடுமாவிலக்கையென்னிற்
றிண்ணமாயதற்குமங்கோர்சிலைவலான்வேண்டுமன்றே. (௨௧)

ஒருவலிபுற்கலத்திலுள்ளதேனுருவநாசம்
வருவுழிநாசமாகுமற்றவைவருதல்பூணைக்
கருவெனப்பூதத்தெய்துங்கலப்புறுவனையாவென்னி
லருகநீதியாயவாதியாயினைபோலுமன்றே. (௨௨)

காரியமாறுமாறக்கட்டினையறுக்குஞ்சீலஞ்
சீரிதினெய்தினெய்துந்திரவியங்கொண்டுமின்று
நேரினிற்புரியாதோர்க்குநிலவுதலூழாலென்னி
லோரினத்தொழில்களாறுமொழிதற்குமதுவாமன்றே. (௨௩)

மெய்வினைவருத்தவுண்டாம்வீட்டின்பமென்னிலேயா
னையுநர்தமக்கும்வீடுகண்ணுதல்வேண்டுங்கண்டாய்
வையகமதனிலின்பம்வருந்தினர்க்குளதாமென்னிற்
கையறுகொண்டின்றுமிகடிந்தின்பங்காண்டியன்றே. (உச)

முன்னையவினைகளெல்லாமுடிவுறநுகர்ந்தபின்னர்ப்
பொன்னெயில்புகுவானென்னிற்பொருகடன்மணலுமாற்று
நன்னவைநுகர்வதெவ்வாறதலைகடல்வற்றப்பூசை
பின்னமீனருந்தின்றபெற்றியேயொக்குமன்றே. (உரு)

நெட்டிடையாழ்ந்ததூவனெடும்புனன்முகந்தபாண்ட
மொட்டியங்கெடுப்பாரின்றியேறிய தன்மைத்தாகுங்
கட்டறுத்தின்பவீடுகாட்டுமோர்கருத்தாவின்றிப்
பட்டினிவிட்டுமீயேபாகதிசேர்தலன்றே. (உசா)

திருந்துநற்றவமேற்கொண்டுதேகத்தைநாளுநாளும்
வருந்துதியவமேயங்கேதாமற்றதையறுதியாமோர்
கருத்தனைநோக்கிச்செய்துகட்டறுத்தவனலெய்து
மருத்திசேரின்பமுத்தியடைதியடைவினென்றான். (உஎ)

அருகன்றேவல்லனென்றுமன்னவனுதிவேத
முறைசெயத்தகாறுமென்றுமொருபறுபொருளிற்கால
பிருவிகம்பல்லாவெட்டினிலக்கணம்வழுவாமென்றுஞ்
செருவவிகடங்கேதான்முன்னுமீவகன்செருக்கிநேர்ந்தான். (உஅ)

## கலி விருத்தம்.

இன்னுயிர்போல்வனெவ்வுயிர்க்குமயானெனத்
தன்னுயிர்வருந்தவேதலைபறித்துய்ப்பார்
மன்னுயிர்யாவைக்கும்வருந்தவேயற
மன்னவன்புகன்றமராடன்மேயினன். (உக)

தும்பையந்தார்முடிசூடி * யாங்கணை
செம்பொருடேர்ந்ததார்க்கிகனைச்சீறியே
வம்புரையெனும்படைவழங்குவேனெனக்
கம்பமாகனிறுபோர்க்கிளித்திட்டானரோ. (௩௦)

* யாங்கவன் எனவும் பாடம்.

மலைப்பின் மற்கலியன்றேவனையன்வாய்மொழிக்
கலைத்திறனூனவகதிரதாகுமா
னுலைப்பிலன்னவகதிருரைக்குமொண்பொரு
ளிலக்கநுண்ணணுக்களைந்தென்னலாகுமே. (௯௧)

அன்னவைநிலம்புனலங்கிகாற்றுயிர்
துன்னுறுவலிகுளிர்சூடுலாவரன்
மன்னியபுணர்ச்சியாமற்றவைந்தினுக்
கின்னமுமுறுவனவியம்பக்கேட்டியால். (௯௨)

பரம்புதல்கீழ்ப்படல்பாங்கின்மேற்பட
லுரம்பெறவிலங்கினேரோடல்கூடியே
நிரம்பிமற்றிவற்றுடனிற்கலுற்றதன்
வரம்பினிற்பதுமெனவகுக்கலாகுமே. (௯௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அறிதராவொன்றுகெட்டொன்றாயுறுவொன்றிலென்றுமா
செறிதராவணுக்கணன்குசேர்தலுமுண்டுகாயத்
துறுதராப்புதுமைதொன்மையொழிதராவொருங்குசேரு
நெறிதராநிற்குமாறிநின்றுருவொன்றுமன்றே. (௯௪)

நீட்டிடல்குறுக்கல்பாங்கினிரந்திடல்விரித்தல்சேரக்
கூட்டிடலுதிர்த்தலூன்றல்குமைத்திடலுண்டல்தின்றல்
மீட்டிடலொண்ணுதேதாங்கும்வியாபியாயொருதன்மைத்தாய்
நாட்டிடலுடைத்தாயென்றுநலிவின்றிநிற்பதாகி. (௯௫)

கருமத்தாலுருவங்கொண்டுங்கண்ணிற்காணாவொண்ணு
வருமைத்தாய்நிலநீராதியணுக்களோடியைந்துவாழும்
பெருமைத்தாய்த்தேவர்காணும்பெற்றியையுடையதாகி
யொருமைத்தாய்நிற்குமற்றோருருபிரணுவுண்மையீதால். (௯௬)

ஒருவியொன்றதனைமூன்றுங்குற்றிடாவிரண்டைநீங்கி
மருவியங்கிரண்டுநில்லாமண்புனலனல்காலென்றாங்
தருகுணமொன்றிரெண்டுதாழ்ந்தொருநான்குமென்று
புரிதருமிரண்டொன்றாகிப்புகன்றிடும்புனிதநூலே. (௯௭)

வெண்ணிறம்பொன்மைசெம்மைமிகுவெண்மைநீலம்பச்சை
யொண்ணிறமிவையாரும்பொன்னெயிறனக்குயர்ந்தவெண்மை
நண்ணுறுமுருக்கட்காகுமற்றவைநாலோடொன்று
மெண்ணுயிரொட்டித்தீண்டிக்கலந்துணர்வெய்துமன்றே. (௯௮)

செவ்விதிற்பெறலிழத்தல்சேர்ந்திடல்பிரிதலின்பம்
வெவ்விடருழத்தல்பின்னுமெலிந்திடன்மூத்தல்சாதல்
கவ்வையினிவ்வோரெட்டுங்கருவினுளமைத்தலாகு
மிவ்வகையூழால்வையமியாவையுமியலுமன்றே. (௩௯)

அறைந்திடுமணுக்களோரைந்தவற்றுடனறம்பாவங்கள்
செறிந்திடவணுவேழாகச்செப்பலுஞ்சீர்மைத்தாமா
ணிறைந்திடுநெடியஞாலநெறியிவையென்னத்தேர்ந்தோர்
கறங்கெனச்சுழலாரின்பக்கதியடைந்திடுவரென்றான். (௪௦)

நுவலுமற்கலிதேவென்றுநானைங்குநாலனையன்சொற்ற
நவகதிரொன்றுமந்நானவிலணுவைந்தாமென்று
மிவைபுகல்கின்றவாசீவகனெதிரெதிரிலாத
நவையில்வாய்மொழிவாளேந்தித்தார்க்கிகனழல்போல்வந்தான்.

கலி விருத்தம்.

வீடுமீளாநெறியென்னின்மீண்டன்னவன்
பாடுமாறில்லைநாற்பாரிலவ்வுலகுறாங்
கூடுமாறில்லைமுற்கூறுமைந்தணுவையு
நாடுமாறில்லைமுழுஞானமுமில்லையே. (௪௨)

மண்டலர்மாறில்செம்போதகர்மாகதி
கொண்டொரிருவருட்கூறுமுன்மண்டல
ரண்டுபோருலகில்வந்தறமுணர்த்திடுவதிங்
குண்டெனுமொழிதியேலாறுவன்கேட்டியால். (௪௩)

மீண்டுருவாகதிமேவியமண்டல
ரீண்டுபாருலகில்வந்தினிதுநூல்பகர்வரே
லாண்டுவாழ்வன்றிமற்றவனியோர்போலவே
பூண்டதோர்பிறவியம்புணரிவீழ்ந்தார்கொலாம். (௪௪)

தீண்டலாலொட்டலாற்சேர்கலப்புறுதலாற்
பூண்டதாலுயிர்ப்பொருளதென்றதனையாம்.
வேண்டிலோந்துயில்கொள்வோர்மிக்கபாலகரிவர்க்
காண்டமூன்றுமுண்டாகுமேயறிவதே. (௪௫)

கீழுமாய்மேலுமாய்க்கிளருமாலவையவை
மேழையாயணுவினுக்கெய்துறுதென்பதென்
னாழிறுவுள்ளதேதொழியுமாவில்லதேதற்
றூழுமாறுள்ளதோதூளேபடுந்தகைமையே. (௪௬)

வருத்தமாற்றிச், சொன்னபடி முண்முடித்துவந்தடைந்த துணை வரொடுஞ்சுமதியாகுந், கன்னன்மொழியொடுங்கலந்துகளிப்பெ னும்வாரிதிபடிந்துகளிக்கும்வேலை. (உ)

## கலி விருத்தம்.

காமனேமுதலியகடியவீரியர்
தாமனைவருமடுசமர்க்களந்தனிற்
றாமதிப்படைஞராலிறந்துசோர்ந்தமை
மாமருட்டுன்மதிமகிழ்ந்தனோக்கினான். (ந)

கண்டனன்மனஞ்சுழல்கறங்குபோன்றன
னுண்டவெங்கனலெனவுயிர்ப்புவீங்கினன்
மண்டணில்விழுந்துமெய்ம்மறந்துசோர்ந்தன
னண்டுருத்துயர்க்கடலகத்தழுந்தினான். (ச)

ஆயிடைத்துன்மதியாகுந்தன்குலச்
சேயிழையன்னவன்சிந்தைதேற்றுவா
ணீயிடருழப்பதுநெறியன்றென்றுதன்
றூயகன்றனக்கிவைநவில்வதாயினாள். (ரு)

## கலி நிலைத்துறை.

பிறந்தமைந்தரும்பெருந்திறலைஞருமபிழையாற்
சிறந்ததுன்மதியாகியயானுமெத்திறமு
மறிந்திலாரொனுகாமமுமமழிவுறாதிருக்க
விறந்தநம்படைநம்வயின்மீட்டும்வந்தெழாதோ. (சா)

மாண்டொழிந்தனர்கிளைஞர்யாம்வலியிலமென்றே
யீண்டுவன்றுயருழப்பதெனின்தனமைவையு
மூண்டசெந்தழன்மட்கியதென்றெதிர்முடுகின்
மீண்டெழுந்தவையனைத்தையுஞ்சுடாதிடைவிடுமோ. (எ)

இணைத்தடம்புயத்துன்னிகல்வலிக்கெவரெதிர்ப்பா
ரணைத்தபுன்கரைதெறும்புனல்போலயன்முதலோ
ருணர்ச்சியென்பனயாவையுமுலைத்தநீவிவேகன்
கணத்தையிக்கணம்வெல்வதற்கருமையோகருதில். (அ)

தேறியிவ்வயின்யான்விடவிடயமாத்தேர்மே
லேறிவன்பகையினித்தொலைத்திடுதியென்றினைய
கூறினாளவள்சொற்றனமனன்றெனக்கொண்டே
யாறிவன்றுயர்பின்னைமற்றிவைசெய்வானுனன். (கூ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வன்மனத்திற்குடிலமெனுஞ்சிலையிலறைதரவெனுநாண்வரிந்து தீமை, புன்மைகளாம்பல்கணையும்பூட்டியுந்தன்புறத்தனைத்தெ ப்பொருளுங்கோராத், தன்மருளாமுடற்கவசந்தரித்தறிதிச்சொற் கழலுந்தாங்கியெண்ணில், சென்மமருதுழன்றுழன்றவைப்புருத் தும் வல்வினையாந்திகிரியேந்தி. (௧0)

ஒவிறாற்போதனையெனும்பேரெடுத்தயுத்தமெனுஞ்சரிகை யொருபால்வீக்கி, மாவிகடக்கச்சைகட்டிமடமையெனுங்கே டகமும்வாங்கித்தீங்கு, மேவியதன்னியமெனும்பல்படைபிறவுந் தெரிந்துகடல்விடம்போலோங்கித், தேவியெனுந்தன்மதியாற் செலுத்தவருமொருவிடயத்தேர்மேற்கொண்டான். (௧௧)

அக்காலையறிஞர்பிரானைக்கொடியோன்வரவுகேட்டருளி யாவி, யுக்காலல்லதாகயவர்க்குள்ளருணைமென்படினுமொழியா தென்று, மைக்காளவிடமனையான்வன்மையினிச்செருப்பன்னை மதித்தாச்சூழ்ந்து, தக்கார்கண்மெய்புச்சமர்பொருவானெழுந் தினையதன்மைசெய்தான். (௧௨)

சிவபத்தியணங்குதன்றசிவகவசந்திருவுடலிற்றரித்திமாமா றவபத்தியருடிருவெட்டெழுத்தெனுஞ்செஞ்சுடர்த்திகிரிதாங்கி யாவு, முவமித்தற்கரியவன்றூர் சரித்திரமாங்கவசுழுடைவாளு மார்த்துப், பவமுற்றுந்தெறும்பிரமவுபதேசமெனும்வீரபட்டம் வீக்கி. (௧௩)

சங்கையிலாவொவிதாதப்பிரமமெனுங்கழல்வீக்கித்தன்னைக் காக்கு, மங்கதியாசங்காதியாசமெனுங்கேடகமுமைத்தெந்நொ ன்றுங், தங்கிலாமதிமுடிக்கேதான்செய்ஸெழுத்தெனுந்தெனத்த குமோர்சூலமேந்திப், பொங்குபுராணங்கள்பதினெட்டெனுமாயு தங்களுந்தன்படையிற்சேர்த்து. (௧௪)

தாரகமாந்தனிச்சாபந்தரித்ததிலாவிருத்தியெனத்தகுநாணே ற்றி, யாரகவேணியன்றனக்குமச்சுதற்குமுளநாமமனைத்துமம்பா கும், பூரகமாந்தனித்தயப்பொருளருஞ்சாயகத்தூணிபொறுத்து த்தேர்ந்த, போரகலாத்தன்னியலாம்பொருபடைகள்பிறவுமொ ருபுறத்திலேந்தி. (௧௫)

தத்துவமா கியவிரதந் தனிலேறிச் சுமதியெனுந் தைய லோடு மத்திறனல்லறிஞர்பிரா னடுகளத்திற் சமர்பொருவா னமைந்த வேலைச்,சித்தமருடன் மதியாங்தேவிசெலுத்தியதேர்மேற்றியங்கு மோகன்,பத்துமுடி யரக்கனன்றெட் டாசரதி மேலெழுந்த படி போல்வந்தான். (௧௬)

கண்ணுற்றான்சுமதியெனுங்காரிகைதன்புறத்தொருபாற்களி க்கமென்மை, நண்ணுற்றாயதிருபகன்முதலோர்சூழவவர்காப் பண்ணான, மெண்ணுற்றாரர்புடைநெருங்கியினிதேத்தத்தத்துவ மாமிரதமீதில், விண்ணுற்றாரிடைப்பொலியுமகபதிபோலெதிரு றுமவ்விவேகவேந்தை. (௧௭)

தன்படைஞர்சாய்ந்தமையுஞ்சாய்ந்தவொன்னார்வென்றமை யுஞ்சுமதிநோக்கி, வன்படர்நெஞ்சகமயங்கித்தன்மதிதன்வாய் மையினன்மடமைமேற்கொண்,டின்புறாயுத்தாயுத்தமறியாமை யெனும்புருவமிரண்டுமேறத், தன்புரிகலக்கமெனுங்கண்சிவப் படர்ந்தினையதொழில்கள்செய்தான். (௧௮)

குடிலமெனுஞ்சிலைவளைத்துக்கொடுந்தொழிலாம்பகழிகள் பல்கோடிகோடி, நெடியதிருபகன்பொறையன்விராகனறன்சுமன் றமனியாயனென்போ, னுடல்கடொறுஞ்சுமதிபதியுரத்தினுந் தோளினும்பிறர்மற்றுள்ளோர்மேனுந், தொடரமலைக்குலங்க டொறுஞ்சோனைமழைபெய்வதுபோற்றாவியார்த்தான். (௧௯)

அக்காலையறிஞர்பிரானன்புளநன்படைஞர்வெருண்டவன் மேற்றாக்கப்,புக்காரையிடைவிலக்கிப்புறத்திருந்துகாண்மினியா ன்பொருமபோரொன்றாக்,கைக்காயசிலைகுனித்தோர்கடும்பகழி தெரிந்தெடுத்துக்கடிதினேவி,மைக்காளவிடமனையான்வழங்கிய பல்கணையெவையுமாற்றிவீழ்த்தான். (௨௦)

சத்தியமென்றருமறைசொல்யாகபலபோகமெனுஞ்சத்திதன் னால், வித்தகநல்லுணர்வழிப்பனெனக்கறுவித் திறன்மோகன் விடுத்தானந்த, வத்திரநண்பொடியாகவெப்பதமுமசத்தியமெ ன்றகலத்தள்ளும், புத்தியெனுமுனைவடிவேலொன்றுதொகுத்தி கல்கடந்தான்புனிதர்கோமான். (௨௧)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கோதுறுங்குதர்க்கமென்றோர்கோரவீரவாளியான்
மோதுவன்களத்தின்மாளவென்றுமோகன்முடுகினன்
றூதடர்ந்ததார்விவேகனதனைமிக்கதர்க்கமென்
றோதுகின்றபகழியுந்தியோர்கணத்தொருக்கினான். (௨௨)

காய்ந்தவஞ்சனன்ன தன்மைகண்டுசௌக தம்மெனு
நாந்தகந்துரந்திதுன்னைநாசமாக்குமென்றுவெம்
பாந்தளென்னவீசினனைதெய்தல்கண்டுபாறவே
யாய்ந்தகன்மகாண்டமென்னுமம்பினலகற்றினன். (உரு)

இனையர்சீறியணையவாளியிவ்வணந்துரந்துபோர்
வினையராகியிகலனந்தவிதமலைந்தவேலைவா
யணையதேர்கடாவினுடன்னருகிருந்தமோகன்மா
மனைவியாகுமவள்செருக்கின்மற்றுமொன்றியற்றினள். (உசு)

ஏனுருததிறலவிஞ்சையென்றுபேர்படைத்தகைச்
சூலமானதைச்சுளித்துசுமதிமீதுதூண்டினு
ளாலகாலமென்னவந்தவதனையவ்வணங்குதன்
மேனுருமல்விஞ்சையென்னும்வேலதொன்றில்வீழ்த்தியே. (உரு)

பாவிமோகனைப்புணர்ந்தவ்வஞ்ஞனைப்பயந்திடுந்
தேவிமேலவ்வஞ்சிதன்னோர்செவ்வொழுக்கமென்னும்வே
லேவினுளதனையண்மார்பினிடைபுகுந்துகுடையவே
யாவிபோயினுள்விழுந்தனங்கமுந்துடித்தரோ. (உஎ)

அந்தமாதமர்க்களத்தழிந்ததன்மைகண்டுநே
ருந்துவாளையன்றிவேறுசாவுநட்புமின்றியே
நொந்தபாவிவசமழிந்துசெயலயர்ந்துநுவலருங்
கந்துலாவும்யானையுண்டகனியினீர்மையாயினன். (உஅ)

சோகமுற்றவன்றனைத்தெருட்டிமுன்புதூண்டுதேர்ப்
பாகெனச்சொல்தேவிபுத்திபாகெனப்பயிற்றலான்
மோகமுற்றதன்னோர்வெம்படைக்கலம்முருக்கிவா
னேகுவிப்பனினிவிவேகனிவனையென்றதேவினள். (உகூ)

பிறந்தமாயவெம்படைக்கலந்துரந்தபெற்றியா
விறந்தகாமனுதியோரியாருமங்கெழுந்துநல்
லறந்தவாதபடைஞர்பேரமர்க்குவம்மினெனவிளித்
துறுந்தமாயுதங்களோடிவ்வுலகமெங்குமோங்கினர். (உகூ)

மாதர்மக்களிரதம்யானைவாவுவாசிவயவரென்
றோதுமப்படைத்திறங்களோடுமக்களத்தின்முன்
சாதல்பெற்றுளோரெழுந்துசமர்பொரச்சமைந்தபோ
தேதமற்றபுந்தியோரொடிறைவனும்மயங்கினன். (ஙo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஞாயமறிஞர்பெருமானுந்தன்னுண்மயங்கும்பொழுதவன்பாற்
போயாரமுதநிகரும்யுத்திபொல்லாமோகன்மயக்கிதனை
யாயாதழுங்கப்பெறுதிகொல்லோவரிதன்றுமசரக்குகையின்
மாயாதீதமெனுங்கணையொன்றிருந்துமெனவிவ்வகைசொன்னாள்

அவ்வாசகந்தன்செவிப்படுமுன்னுமாமெனக்கொண்டறிஞர்பிரா
னைமவாரணம்பண்டழைத்தகண்ணன்மாயாதீதமெனுநாம [ன்
வெவ்வாசுகமொன்றேவாமுன்வெய்யோன்வஞ்சவினையனைத்துஞ்
செவ்வானிரவியுதிக்கநில்லாத்திமிரம்போலத்தீர்ந்தனவால்.(௩௨

உலகமயக்குமதிமோகமொழிக்குமுகுந்தன்றிருநாம, மில
கும்பகழிபின்னருமொன்றெய்தானவ்வம்பெழுந்தோடிக், கல
கம்விளைக்கும்புன்றொழிலோன்கன்னெஞ்சுருவிக்கங்கையிற்றோ
ய்ந், தலகில்விசைகொண்டடைந்ததையனம்பொற்சரதூணியி
லம்மா. (௩௩)

எண்ணில்வயிரத்திறன்மார்பையீர்ந்தவாளியெழுந்தோட
விண்ணிலெழுந்தகார்மேகமின்னியிடித்துவீழ்ந்ததுபோற்
கண்ணிலெழுந்தகனல்சிதறக்கனன்றார்ப்பரித்துமுகங்கவிழ்ந்து
மண்ணில்விழுந்தானடல்விடயத்தேர்மேனின்றமாமோகன். ()

மன்னன்மோகனிறந்திடுமந்நிலையேயவன்றன்மதித்தேவி
யென்னுமாதும்பெருங்கனலோடியைந்துபுகையுமிழுமாபோற்
பின்னமேதுமின்றிமுன்னந்தம்முள்விழைந்தபெருங்காத
றன்னதாருயிரையுந்தந்தானுமிறந்துதகைப்பட்டாள். (௩௫)

ஷை வேறு.

அந்தரத்தமரர்துள்ளியலர்மழைபொழிந்தார்தேவ
துந்துமியதிர்ந்ததுண்மைச்சுருதிநான்மறைகளார்த்த
மந்திரமுனிவர்யாரும்வாழ்த்தினர்மயக்கநீக்கி
யிந்தியமடக்கும்யோகரிதயமுங்களித்தமாதோ. (௩௬)

தோகைநற்சுமதியென்னுஞ்சுரிகுழல்வஞ்சியோடும்
வாகையந்தாமஞ்சூடிவயங்குதேர்நடத்திமன்ன
ரோகையங்கடலின்மூழ்கியுயர்நிருபகனேயாதி
யாகியகிளைஞர்சூழவரசியலிருக்கைசேர்ந்தான். (௩௭)

மோகன்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௬௭௮.

மைந்தரேயான்வாழ்ந்தவாழ்வையெல்லாம்பொய்யாக்கிட்
டந்தர்சூழ்பாறும்படுகளத்திலெல்லீருந்
சிந்தினீர்கண்டுமின்னந்திவினையேன்பொன்னாம
லுய்ந்துளேன்போலொருத்தியுண்டோவென்றுநிதியென்பாள்.

உங்கடிருமூதாதையாமவனையுங்கடந்து
தங்குமூடற்பல்சிறையிற்றன்னைத்தமேமுனி
லங்கவனையெல்லீருமார்த்தகெடும்போதற்றன்
மங்கியதோவங்கிவிர்த்திமக்கள்வலிக்கின்றென்பாள். (௧௭)

அன்றரனுமாலுமடங்கத்தனித்தனிபோய்
வென்றதுமதாற்றலெல்லாம்விண்டனையர்பத்திகடா
மென்றமடவார்திறங்கொண்டெய்தினர்திண்டோள்வலியாற்
பொன்றியதேதுற்றபுதுமையிதுவென்றென்பாள். (௧௮)

கத்துருவின்பாலைகருக்கவினைத்தகாதவன்றன்
சத்துருவாயுஞ்சிலைரத்தப்பவைவன்விட்டவேறு
வத்தகையுஞ்செய்யாதடங்கக்கிளையமூத்தோதான்
புத்தியுடையோனும்பொறையுடையோனுமென்பாள். (௧௯)

கோசலைதன்மைந்தனைக்கைகேசிகொடுங்கான்புகுத்த
மாசிலவனந்நிலையேமாளவாதிருந்தனனென்
றேசியபான்மாற்றனியற்புதல்வாவென்மக்க
ளாசுறக்கண்டுமின்னநானிருந்தனன்றென்பாள். (௨௦)

காவியங்கண்ணீராறுய்க்கரையவயிறலைத்துப்
பாவியன்றுமீட்டும்பதைத்துப்படியிலயர்க்
கோவியங்கொலென்னவுயிர்ப்படங்கியுண்ணுறையு
மாவியுங்கண்டோனுமைந்தன்பெனுங்கூற்றுக்களித்தாள். (௨௧

## கலிநிலைத்துறை.

ஆயகாலையிலெத்தமானைதனியறியப்
போயதூதுவர்வந்துநல்விவேகனைப்போற்றி
மேயதாய்ப்பிரிவித்திமாண்டமையுமெய்த்தாதை
யேயமைந்தர்பாவிரக்கமுற்றயர்ந்தமிசைத்தார். (௨௨)

அந்தவாசகங்கேட்டலுமறிஞர்கோனிரங்கி
முந்தமேவியநாமகடனைக்கரமுகிழ்த்து
மைந்தர்மாய்ந்தபோதிடர்பொருதாங்குமெய்ம்மையங்கு
மெந்தையார்தமைத்தெருட்டிடற்கெழுந்தருளென்றான். (௨௩)

நன்றுநன்றெனநயந்துநற்கலைமகணடந்து
சென்றுவெஞ்சமர்க்களத்திடையாங்கொருசிறையிற்
புன்றொழிற்பிரவிருத்திமாண்டமையுமோர்புறத்திற்
கன்றிமானதன்றனைமறந்தயர்ந்ததுங்கண்டாள். (௨௪)

ஆங்கவன்றன்மேலன்பெனுமென்புனறெளித்தே
யோங்குமின்சொனன்மருந்தினாலாற்றலுமுயிர்ப்பும்
வீங்கவெங்கணும்விழிப்பமெய்துடிப்புறவிம்மி
யேங்கியுய்ந்தொருவண்ணமானதன்றெளிந்தெழுந்தான். (௨௫)

அவ்விடத்துறைமாதைப்பார்த்தருங்கிளையடங்கத்
தெவ்வடர்த்தவிப்பாடுகண்டினனழுந்தீரா
வெவ்வுடற்பொறைசுமந்துளேன்விழைபிரவிருத்தி
யெவ்விடத்துளானிங்குவந்திலன்கொலோவென்றான். (௨௬)

அனையவாய்மொழிகேட்டவளடுகளத்தடுத்த
மனைவிமாய்ந்தனள்புத்திரசோகமாம்வாளா
லனைமொழிந்தனளன்னசொற்கொடுந்துயரிறந்தார்
தனையரென்றபேரிடரையுந்துரந்ததாற்றுக்கி. (௨௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மயில்பொரத்தளர்ந்தநாகம்வல்விசைக்கலுழன்றாக்க
வுயிர்படைதடைத்தாலென்னவொண்டிறற்றுமார்வீந்த
துயரினுமனைவிமாய்ந்ததுன்பமீக்கொண்டொழுகி
யயருமானதன்றன்பின்னுமீதுரைத்தாற்றினால். (௨௮)

உண்ணுமாரமுதுமாய்மெய்யுறைமாயுயிருமாகிக்
கண்ணுமாய்க்கருத்துமாய்ச்செய்கருமமாய்க்கருமந்தன்னு
னண்ணுமாநிதியுமாய்நன்னிதிப்பயனுமாயெ
னெண்ணுமாமுன்னைநீங்கியானெவ்வாறுய்வேனென்னும். (௨௯

மோகமாய்மோகலீலைமுயக்குமாய்முடிவுறுச்சம்
போகமாயென்பான்மற்றெப்பொருளுமாய்ப்புணர்ந்தநீயே
காகமாமதனிரண்டுகண்ணுக்கோர்மணிபோலாவி
யேகமாயிருந்தநெஞ்சமெங்கயர்த்தனையோவென்னும். (௩௰)

யானுடலென்றுநீயோவிவ்வுடற்காவியென்றுந்
தானுரைசெய்தாயுன்சொற்றப்புரையன்றோமற்று
ஞானுடையுயிராம்யானிங்கிருக்கநல்லுடலாநீயவ்
வானிடையுற்றதென்னமாயமோவறிவோயென்னும். (௩௧)

வஞ்சிநுண்ணிடையாயுன்னை மறந்தொருபொழுதும்வாழேன்
றுஞ்சியகனவினூடுந்துறந்திலேனிறந்தாயென்னி
னுஞ்சினியிருப்பேன்கொல்லோவுன்னைப்போலேழையேன்வன்
னெஞ்சுளனல்லேன்வந்தேனினக்குமுன்யானுமென்னும். (௩௨)

புத்திரரிறந்துமீன்றபுதல்வியர்மாண்டும்பேரர்
மித்திரரென்போர்யாரும்வீடியும்வீடாதுய்ந்தேன்
பத்தினிநீயும்வீந்தபாடுகேட்டறிந்துமாளா
தித்தரைதன்னிலின்னமிருப்பனோவுயிர்கொண்டென்னும். (௩௩)

இவ்வகைபலவும்பன்னியினியரைக்கணத்திலாவி
வெவ்வழறன்னின்மூழ்கிவிடுப்பனென்றெருப்பட்டானை
யவ்வயினடுத்தவாணியங்கையாலமைத்தின்சொல்லா
லுய்வகையுணர்வுமூட்டித்தேற்றுவாளுரைப்பதானாள். (௩௪)

மானதன்புலம்புறுசருக்கம் முற்றிற்று.
ஆ விருத்தம் - ௧௲௧௨.

---

## ௩௬ - வது, கலைமகள் தேற்றச்சருக்கம்.

———:(⌣):———

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மன்னவமதியிலார்போன் மயங்குவதென்னோநல்லோர்
பன்னருங்கலைகள்யாவும்பகுத்துணர்ந்தவனீயன்றோ
வின்னலுற்றயரேற்றோற்றுமிவ்வுலகனைத்தும்வானின்
மின்னையொத்தழியுமென்னுமெய்ம்மொழிவினவிலாயோ. (௧)

மண்ணொடுதெண்ணீர்தேயுவாயுவானிவையோரைந்து
நண்ணுமன்னுயிர்கள்யாவுநயனமாயிரம்பெற்றோனு
மெண்ணில்வானவருமெல்லாமீன்றெடுத்தினிதுகண்ட
புண்ணியவேதன்றானும்பொன்றுமாறுணர்ந்திலாயோ. (௨)

எத்தனையென்றுசொல்கேனிப்படியனந்தகோடி
நித்தியமின்றித்தோன்றிநிமிடத்திலொழிந்தவென்றாற்
சத்தியம்யாதுசுற்றுசகடக்கால்பிறப்புஞ்சாவு
மித்தகையறிந்துமீங்கனிறந்தவர்க்கழுங்கலாமோ. (௩)

பூதங்களைந்துமொன்றாய்ப்புணர்ந்துநீர்ப்புற்புதம்போன்
றேதங்கொளுடல்களாகியெழுந்தவையிறக்குங்காலைப்
பேதங்களாகித்தத்தநிலைபுகப்பெறுமாலென்று
மீதங்கண்ஞாலத்தோர்ந்தோர்க்கிடரெங்ஙனெய்துமம்மா. (௪)

முற்பரம்பொருளதொன்றேமுதலிடையிறுதியின்றி
நிற்பதுமற்றியாவுநிலைபெறுத்தகைமையாகுங்
கற்பனையென்பதோர்ந்தகருத்துளோர்தம்பாற்சோகம்
பற்பலவரினுந்தீவாய்ப்பஞ்செனப்பாறுமன்றே. (௫)

நிந்தனையுடல்கடோறுநீசிறைவைத்தனான்றும்
பந்தனஞ்செய்துன்மக்கள்பலரிடரிழைத்தபோது
முந்தைசஞ்சலமாங்குற்றதுண்டுகொலனையனீன்ற
மைந்தனீயர்தனன்றேமயங்கலென்றினையசொன்னாள். (௬)

மாற்றமதுரைத்தல்கேட்டமானதன்வாணிநின்சொ
லாற்றுதண்புனலுமுற்றவுறுதுயருலைவாய்த்தீயி
லேற்றுமென்னெஞ்சமாம்வல்விரும்புவெந்தெரியுஞ்சூட்டை
யாற்றிலதென்னிலெவ்வாறுருயிர்தரிப்பதென்றான். (௭)

மெய்க்கலைமகளவ்வார்த்தைவினவியவேந்தைநோக்கி
மக்களென்மனைவிசுற்ற * மென்னுமவ்வாஞ்சையாலித்
துக்கமெய்தியதாலன்னதொடர்ச்சியாநேசப்பாசச்
சிக்கினைத்தவிர்தியென்றுத்தெரித்திவைபின்னுஞ்சொன்னாள். ()

முடையுடல்சனிக்குமுன்னுமுடிந்தபின்னுமின்றி
யிடையிலெம்மக்கடாரமினமெனுஞ்சங்கத்தோடத்
தடையுறும்வலையில்வீழ்ந்துதம்முணர்வழிந்துசோக
மடையவெவ்விடரின்மூழ்குமறிவின்மைபிறிதுமுண்டோ. (௯)

இத்தகையாதலாற்பேரிடரினுக்கேதுவாகு
மத்தகைமயக்கைவேரோடகற்றுதியென்றவேத
வித்தகியுரைத்தாளன்னமெய்ம்மொழிகேட்டுமீட்டும்
புத்திரசோகமாறாப்புரவலனினையசொன்னான். (௧௦)

தாயுரைகொண்டுதந்தைதனைச்சிறைவைத்தேன்மக்க
ளாயபற்பலராற்பின்னுமனையனைப்பந்தஞ்செய்வித்
தேயவந்நிவிர்த்திமக்கட்கிடர்செய்வித்தனையர்தம்மான்
மாயவித்தனைபேருக்குமறலியைவருவித்தேனால். (௧௧)

மக்களைமக்களோடுமகளிரைமகிணரோடும்
புக்கபோரிடைமாய்வித்தேன்பொருவிலாப்பிரவிர்த்திக்குந்
துக்கவெங்கூற்றாலாவிசோர்வித்தேன்றுஞ்சாதின்ன
மெக்கருமஞ்செய்வித்தற்கிங்கியானிருக்கின்றேனே. (௧௨)

---

* என்னும் வீண்வாஞ்சை எனவும் பாடம்.

தீத்தொழில்புரிந்துளோரைத்தீர்ந்துதேர்ந்துலகமெல்லா
மேத்துநல்லோரைச்சேர்ப்பார்க்கெய்துமோபழிதானென்ன
மூத்தவளிறந்துபின்னுமுளரியந்திருவேயென்ன
வாய்த்தவணிசெய்குற்றமதிப்பளோமனத்துளென்றாள். (உக)

இவ்வகைவாணிகூறவிருசெவிகுளிர்ந்துதீரா
வெவ்விடர்க்கடலின்வீழ்ந்துவீடுங்கான்மிதப்பொன்றுங்கே
கைவசமுற்றாலென்னக்கருணைசெய்துடையநின்று
லுய்வகைபெற்றேனென்றுரைத்தசொற்சிரத்திற்கொண்டான்.

கலைமகள்தேற்றச் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - களருச.

## ருள - வது, விவேகன்முடிசூடு சருக்கம்.



கலி நிலைத்துறை.

ஆயகாலையினுவகைபூத்துரைமகளடுத்த
நேயமானதமன்னவன்றனையவணிறுவி
யேயதேவியைமக்களைக்கொணர்வனீங்கென்றுப்
போயினானன்னப்புள்ளரசுகைத்திமைப்பொழுதில். (க)

சென்றுகண்டனனிவிர்த்தியின்றெடுத்தநற்சேயை
நின்றுகைதொழுதன்னவனிகழ்ந்தமைவினவ
மன்றலங்குழலாநிவியோடந்தமும்வழாமற்
றன்றிறத்தினுமுரைத்தனன்மகிழ்ந்தனன்றக்கோன். (உ)

அந்தவாசகமனைவர்க்குந்தெரிவுறவறிவித்
தெந்தைபாலினிச்செல்வன்யானீவிரெல்லோரும்
வந்துசேர்மின்கள்பின்னரென்றினியசொல்வழங்கிச்
சிந்தையார்வமாம்பரிமிசைவிரைவினிற்சென்றான். (ங)

பன்னுநான்மறைப்பஞ்சரப்பசுங்கிளிசெந்தூட்
டன்னவாகனமேற்கொண்டுமுன்செலவினையாள்
பின்னரேகியமன்னவன்பிரிந்ததன்பிதாவை
யின்னதீர்தரக்கண்டகண்களிப்புறவெதிர்ந்தான். (ச)

வந்துமண்மிசைமார்புறப்படிந்தனன்வணங்கிச்
சிந்தையன்புறுஞ்செல்வனைவல்விரைந்தெடுத்தே
யுந்துதன்னுடற்பொறைபிரிந்தெய்துநல்லுயிர்போ
லந்தமில்லகத்தார்வமோடிருறவணைத்தான். (ரு)

தழுவிமைந் தனையுச்சிமோந் திணைவிழிக் கடநீர்
முழுகுறும்படி மஞ்சனமாட்டியேமுடியா
வழுவலன்பொடுதுன்பமுமிடையிடையுள்ளூ
டெழுதொறும்பெருமூச்செழவிம்மினனிருந் தான். (௯)

அறிஞர்கோன் றனை மருங்குறவிருத் திநாணை தனற்
சிறிதுபோது தன்முகங்கவிழ்ந் திருந் தனன் றேறி
மறுவிலன்பொடுநோக்கினனயனின்வாய்மை
யுறுதியுட்கொளாதேதமைநூயேறு றாநோயொன் றே. (௰)

தாங்கருந் துயருழந் தமைமீவரத் தழீஇ
நீங்கினேனயம்பரிசனவேதியானொடுமாற்
றேங்குபொன் மயமுற்றெனைமாற்றினியுன்சொ
லீங்கியானுயிரிறக்கினுமறுத் திடேனென் றான். (௰௧)

ஈதவன்சொலவறிஞர்கோனவ்வனைத் திங்நாள்
மாதவஞ்செயப்பெறுபயனுற்பின்னும்வந் து
தாதைதின்பதம்பணிந் திடர் தவிர்ந் தனன் றாரியேற்
காதரம்பிறிதிலையுனையன் றியென் றனைநந் தான். (௰௨)

இறைவிவேகன தியம்பினனிருந் தருளெல்லைப்
பொறையெனுஞ்சுதன் றன்னொடும்பின்செலப்பொருவி
னிறைகுணப்பெரும்புதல்வனையீன் றாள்ளிளிர் த்தி
மறுவிறிங்கள்வாண்முகத்தினுண்மகிணைன்றான் வந் தாள். (௰௩)

வந் துகண்டுகண்களிப்புறத்தொழு தியன்மகினைன்
சிந்தையம்பெருங்கோயிலுட்புகுந் தனள்பிறந் த
தந்தைசெஞ்சரண்பொறையுடனும்வணங்கினன் றயவோ
டந் தமான தனவனையுமகிழ்ந்தெடுத் தணைத் தான். (௰௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிருபகன்விராகர்கோமானெடுஞ்சுமன் றாமன்சக்கே தாடன்
றருசமாதானவீரன்சத் துவன் றயவுஞ்செல்வன்
மருவுமட்டாய்கயோகமந் திரத்தலைவரின்ன
பொருவரும்புதல்வர்யாரும்புகுந் துடனணைத் தாழ்ந் தார். (௰௫

தாழ்ந்தவர் தம்மைத் தாதை தனித்தனியெடுத்துப் புல்லி
யாழ்ந்தபோ ரன்பிற் கண்ணீ ரருவியங் கலைமாட்டிச்
சூழ்ந்தவ ரவரெல் லோர்க்குஞ் சொல்வன முகமன் சொல்லி
வாழ்ந்த தன் மருங்கி லோர்பால் வைகுவித் திருந்த வேலை. (௧௩)

தருமனிச் சயனடக்கன் சன்மானன் சுகனேறோர் மெய்ய
னருளியற் பரோபகார னற்புதன விரோதன் று
னிருவிகற் பன்மா மோனன் னிருமலன் முதலாயுள்ள
பெருமைநற் பேரார் யாரும் பின்பிதா மகனைச் சேர்ந்தார். (௧௪)

அனையவர் வணங்குந் தோறு மவரவர்க் கருள் பாலித்து
வனைகழற் சீலருதி மருகர்வந் திறைஞ்சினோர்க்கு
நினைவுறு மாசி கூறி நிகரினற் சிரத்தை சாந்தி
யெனுமவை வரவு நோக்கி யினிமையாங் கவர்க்குஞ் சொன்னான். ()

புதல்வியர் கருணை நீதி புகன்மயித் திரியு பேட்சை
முதிதையென் றினையர் தாழ்ந்தார் முகங்கொ ளுமினிது வாழ்த்தி
மதிமுகச் சமதியுத் திமரியாதை தவிரத் திராந்தி
யெதிருறும் புனிதை யாதி யியன் மருகியர் மற்றோரும். (௧௬)

வந்தடி வணங்குந் தோறும் வான்முறை யாசி கூறி
யந்தமிலார் வைத்தோடு மகமெனும் பொற்கோயின்
முந்துறப் புகுத்திப் பின்னு முதுமறைக் கிழத்தி நின்று
னுய்ந்தனனடியேனென் றவரைத் துணைமுலைப் புத்தான். (௧௭)

மானதவேந் தன்றன்பான் மருவியகிளர்த் திவர்க்க
மானநத்தினைஞர் யாருமனை வளாயமார்ந் தானன்றுத்
தேனவிழ் துழாய்மால் பத்திசை பத்தியென் னுமின் சொன்
ஞானயோகினிகடா முநயந் தவண் வாரா நிற்றால். (௧௮)

இடையொகணத்தின் மேனுமிருஞ் சிறைவயினதேயன்
பிடரினுமன்ன மாதர் பிறப்படியார்க் குத்திர்க்கு
நடையிற் சரண்ணைத் தாங்கே நண்ணினர் நண்ணலோடுங்
கடலமர்ந் தனையதீரா ரனைவருங் கண்ணுற் றால். (௧௯)

கண்டனரெழுந்து தங்கள் கதிர்மணி முடியிற் செங்கைப்
புண்டரீகங்கள் கூப்பிப் பொருக்கென வெதிர்ந்து நாவிற்
பண்டருமறைகள் பாடிப் பரவினர் வரவு நோக்கி
யெண்டருமூர் திமாற்றி யிருவரும் விரைவிற் சேர்ந்தார். (௨௦)

திருந்துமானதனுங்கிட்டசிந்தையாமணிப்பொற்பீடத்
திருந்தனரருகேநிற்குமின்சொனுமகளைநோக்கிப்
பரிந்திவணிருத்தியென்றுப்பணித்தனரருட்கணோக்கம்
புரிந்தனர்பின்னுஞ்சூழ்ந்தபுண்ணியர்பிறர்க்குமன்றே. (உக)

சொன்னயோகினிகடம்மைத்தொழுதானன்னிவிர்த்திகேள்வ
னன்னையீர்நும்மையான்பண்டறிவுறாமையுநீக்கி
மன்னுசீரொளியெற்கீந்தமக்கடம்பொருட்டாலெய்தற்
கென்னமாதவமோசெய்ததென்னகக்கூடிவிதென்றான். (உஉ)

ஆயவரதுசொலாமுனவரருள்பெறாவிவேகன்
றாயருகணையக்கண்டகன்றெனச்சார்ந்துபோற்றித்
தீயவெவ்வினைகள்யாவுந்தீர்ந்திவரருளாலின்ப
மேயினனென்றுத்தாதைக்கவையெலாம்விரித்துச்சொன்னான்.

நன்றெனவியந்துகேட்டநாயகன்விவேகனென்னுந்
தன்றிருமகனைநோக்கித்தமியனைப்பிரிந்துநீ*தான்
சென்றபினினையரன்பாற்றிருமணஞ்செய்தேனென்ற
மன்றலங்கோதையீங்குவந்திலள்கொல்லோவென்றான். (உச)

திருந்துபநிடதையாமத்தேவியைக்கீதையென்று
மருந்தினுமினியபாங்கிதன்றொடுமைத்தேவன்யாண்டன்
டருந்தவம்புரிந்தராடாபுரத்தினின்னருளினாலிங்
கிருந்தனரன்னலாருமிவண்வரப்புரிவேனென்று. (உரு)

சத்துவன்மகளைநோக்கித்தருதியீண்டவளையென்று
வுத்தமர்பெருமான்கூறவுரைத்தசொற்சிரத்திலேந்தி
மெய்த்தலமதனிலெய்திவிளங்கிழையிருக்கைசார்ந்துப்
புத்தமுதனையாளாங்குநிகழ்ந்தமைபுகல்வதானாள். (உசா)

ஷ வேறு.

மோகனுதியருமவன்கிளைஞரும்வெஞ்சமர்க்களத்தின்முருங்கப்போர்செய், தேகநாயகனுநம்மிறைவனுமெய்த்துணைவருமற்றெவரும்வெற்றி, வாகைமாலிகைபுனைந்துமானதனுந்தாதையையுமருவிப்பத்தி, யோகநாரியர்துணைகொண்டுறைந்தனரார்சோபனமீதுற்றதம்மா. (உஎ)

மங்கையுனையீன்றகலைமகளுமவனுற்றனளுநன் மாமன்காண்டற், கங்குவரக்கொணருதியென்றரசனெனைப்பணித்தனனீதடுத்

* கான் எனவும் பாடம்.

ததென்றுப், பைங்கிளியப்புனிதைமகள்பகர்ந்தசொற்கேட்டலு
முவகைப்பாவைதன்னுட், பொங்கியெழுமுகமலரப்புண்டரிகன்
மகளுடலம்பூரித்தாளால். (௨௮)

புனிதைமகட்கின்சொலெனுந்தெள்ளமுதமூட்டியருட்பொற்
பூண்பூட்டிக், கனியுமுளத்தன்பினொடுந்தழுவியணிமுலைக்க
ணமுமீங்கா, வினியமொழிக்கிளைதயொடுமிறைவன்விடுந்தூதியொ
டுமெழுந்தபின்னுட், டனியிருந்ததூயரகலைத்தவத்தினர்நாவெனு
ஞ்சிவிகைதன்னில்வந்தாள். (௨௯)

வருசிவிகையிழிந்தவையிலிருந்தவர்கண்களிகூரவந்தழுந்தி
யிருந்திறயோகினிகடமைவணங்கி மலர்வாணியையுமிறைஞ்சித்த
ன்பாற், கருணைமிகுமாமனையுமுடிதாழ்ந்தாசிவிர்த்திடத்தமலைஞ்
சூடி, யொருதனிநாயகனையுந்தன்னுள்ளத்தாற்பணிந்தயல்வந்து
ற்றுண்மன்றே. (௩௦)

அப்பொழுதுகண்டுகளித்தகமகிழுமானதனைமரைநோக்கி
யிப்புவனம்போற்றுசிவபத்தியரியபத்திநல்லாரினிநீயென்றன், மெ
ய்ப்புதல்வனுந்திறல்விவேகனைமாமுடிசூட்டியின்னுமின்னுந்
செப்பருநல்லாசாட்சிச் செங்கோன்மைசெலுத்தும்வகைசெய்தி
யென்றார். (௩௧)

## கலி விருத்தம்.

கேட்டலுமவ்வுரையினருமானதன்
கோட்டமிலுவகைமீக்கொண்டுமூண்டகத்
தாட்டுணையோகினித்தையலார்தமை
மீட்டும்வந்திறைஞ்சினனிவைவிளம்பினன். (௩௨)

ஒருவர்க்குமிலையவனுள்ளன்பென்னலாம்
பெருமைத்தன்னியல்விடாப்பிரகலாதற்குந்
தருமத்தினின்றவீடணற்குந்தாழ்வுறுத்
துருவற்குமணிமுடிசூட்டுவித்ததாம். (௩௩)

மெய்த்தவம்புரிந்தயர்மிருகண்டுமாமுனி
புத்திரன்றனக்குமோர்புரவித்தாமற்கு
மூத்தமத்தண்டியாதியர்க்குமொப்பிலா
நித்தியத்துவந்தந்தாரீவிரேயன்றே. (௩௪)

ஆங்கவர் தமக்குமுன்னருள் புரிந்தவா
றீங்கெளியேன் பெறுமியல்விவேகற்கு
நீங்கணற்கருணையானிகரின் மாமுடி
தாங்குறப்பணித்தனென் றவைத்தின்பேறரோ. (௩௰௫)

எனவிவைபகர்ந்துதன்னிருமண்டபம்
புனிதவெண்சுதையினாற்புதுக்கிப்புண்ணிய
வினையெனும்படங்களான்மேல்விதானஞ்செய்
தனகனேன்பெறுமலரலங்கலுற்றியே. (௩௰௬)

தெரிதருகல்வியாஞ்செம்பொன்மாமணி
யரியணையதனடுவமைத்துத்தேற்றமா
மெரிசுடர்மணிவிளக்கேற்றியேற்பனா
புரிதியென்றுழையராற்புரிவித்தானரோ. (௩௰௭)

அத்திருமண்டபத்தரியமால்சிவ
பத்தியர்நாமகளுடனொர்பாலுற
முத்திளநகைமதிமுகமிளிர்த்திதன்
புத்திரினத்தொடோர்புடையிற்றுன்னவே. (௩௰௮).

கருணையுமுதிதையுமுபேட்சைக்காந்தையு
மருவுநன்னீதியுமயித்திரிச்செழுந்
திருவுமம்மடந்தையர் திருமருளரு
மொருபுடைகண்களித்துவகைகூறவே. (௩௰௯)

மக்களுமகளிருமற்றுளோர்களுந்
தொக்கனரருகுறச்சமறிந்தோனையு
மிக்கநல்லுபதிடமின்னுமேவந்துளுந்
தக்கவரருட்கடறன்னின்மூழ்கியே. (௪௰)

தந்தமக்குரியபூந்துகிலுஞ்சாந்துமுங்
கந்தநாறலங்கலுங்கதிரைமத்தரீ
ரந்தமில்கலன்களுமணிந்துபாங்குற
வந்தனரரியணையதனின்மைந்தனோர். (௪௰௧)

சதுமறைப்பேரிகைதடாரிதண்ணுமை
யதிர்குரற்படகமெம்மருங்குமார்ப்புற
விதிமுறையியன்றனேநார்கொற்றவெண்குடை
யெதிரிலாநிருபகனினிதினேந்தவே. (௪௰௨)

மேதகுபொறையனும்விறல்விராகனுங்
காதலித்திருபுடைகவரிவீசிடத்
தாதவிழ்தாமனைத்தாதைமானதன்
மாதவராசியாமவ்விருட்டினன். (௪௩)

ஆர்த்தனசிவகைதயரிதன்றுமேசங்
கீர்த்தனமங்களகீதந்தோடுமே
போர்த்தனபுவியெலாம்புனைபூமழை
தூர்த்தனர்முனிவரரெழுந்துதுன்னினார். (௪௪)

திருமுடிவிவேகர்கோன்சிரத்திற்சூட்டுவித்
தருளெனுந்தம்பொருளவனகத்தில்லைத்
தொருமலர்வாணியுமுயர்ந்தபத்திக
ளிருவருமவனிடத்தினிதின்வாழ்வுற்றார். (௪௫)

அந்தணராறொழிலையுமாதியாய்
வந்தநல்லறங்களுமகத்தின்செய்கையுந்
தந்தருடானமுந்தவமும்யாவருஞ்
சிந்தையிற்பயன்குறியாமற்செய்கின்றார். (௪௬)

பண்டறிமோகனாற்பார்விட்டோடிய
வெண்டிசைக்காவலர்முதலெத்தேவரு
மொண்டிறல்விவேகவேந்தனைமேவலான்
மண்டலத்தெய்திநல்வாழ்வின்வைகினார். (௪௭)

இருவிலந்தைழுயவெவ்வழும்வாய்ப்பவான்
கருமுகில்பொழிந்தனகறவைபல்கின
பொருபகைதவிர்ந்தபுலிபுல்வாயொடு
மொருதுறைபுகுந்தாகல்லுதகமுண்டதால். (௪௮)

படித்தலைமகட்கிடாரீங்கிமெய்
தடித்தனவாதலிற்சற்பராசன்பன்
முடித்தலங்களுக்கலர்முடித்தொத்தலாற்
பிடித்தபேர்பூவெனப்பிடித்ததின்றுமே. (௪௯)

பொறைவயிராக்கியன்புனிதன்சத்திய
னிறைசமன்றமன்றவனியாயனிச்சய
னிறைமரியாதைநல்லடக்கன்யாவரு
மறைகடலுலகெலாம்படர்ந்தளாவினார். (௫௦)

## ௧௨-வது, சருக்கம்.

———)o(———

௨. பை - பாம்பின்படம். அராவரசு - ஈண்டுவாசுகி என்னும் பாம்பு.

௩. மருள் - மயக்கம். சதிர் - நடனம்.

௫. நரையாயன் - மீன்குத்திப்பறவை. போத்து - செம்போத்து. வலியன் - கரிக்குருவி. சேகு - வயிரம். "போத்திகனரையாயன்" என்பது மோனையின்றுதலின், "நரையாயன் போத்திகளும்" எனமாற்றப்பட்டது. இவைபழயபிரதிகளிலும் பின்னர்க் கூறப்பட்டபடியே பாடம்.

௧௦. மங்குல் - மேகம். சிந்துரங்கள் - யானைகள்.

௧௨. அப்பிரதக்கணம் - இடமாய்ச்சுற்றல். பிழம்பு - திரட்சி.

௧௩. சின்மதி - அற்பபுத்தி.

௧௪. மடங்கல் - சிங்கம்.

## ௧௩-வது, சருக்கம்.

———:※:———

௧. சாருவாகன் - பிரத்யக்ஷத்தாற் காணப்படாதவை இல்பொருள்களாம் என்றுகூறும் நாஸ்திகன்; உலகாயதனும் இவனும் ஒரேகொள்கையுடையோர்.

௨. வழுத்தி - துதித்து.

௩. துன்னும் - கிட்டினான்; இதுநாற்பாற்படர்க்கைவினைமுற்று; ஈண்டு ஆண்பாலில்வந்தது.

௫. விசயம் - வெற்றி.

௬. அந்தரம் - ஆகாயம்.

௭. வள்ளம் - கிண்ணம். உடபாசம் - பாட்டிலி.

௯. சீர்மையில் - சீர்மானத்தில்; இதனைச் "சிறந்தார்கொல்லோ" என்பதோடியைக்க. காசினி - பூமி; (பரசுராமராலே தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டதால்) காச்யபருக்குச்சொந்தமானது என்பதுபொருள்; காச்யபீ என்றவடசொல்விகாரம்.

௧௦. பொறித்த - எழுதிய. கைமாட்டாதார் - கையால் எலாதவர்.

௧௨. இரண்டும் - (பொருளும் இன்பமுமாகிய) புருஷார்த்தங்களிரண்டும்.

௧௩. அமுதம் - நீர். கூவல் - கிணறு; பூமிசம்பந்தமான நீரையுடையது என்பதுபொருள்; கூப: என்றவடசொல்விகாரம்.

௧௪. வான் - பெருமை. தாமம் - புகை. அத்தப்பாமர் - முழுமூடர்; அறிவுசிறிதுங்கலவாது சுத்தமாயிருக்கும் மூடத்தனத்தையுடையோர் என்றபடி. பாவம் - அதிட்டமின்மை; அக்கிரமம் எனல் பொருந்தாது.

௧௫. விசும்பு - ஆகாயம் (தேவலோகம்).

௧௬. தென்புலத்தார் - படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்ட பிதிர்தேவதைகள்; அவராவார்:— கவ்வியவாகன், அநலன், சோமன், யமன், அரியமன், அக்கினிஷ்வாத்தன், பர்ஹிஷத் என்னும் எழுவர். துகளி - விளக்கில் எண்ணெயிற்கும்பாகம் (அகல்). மல்க - நிறைய.

௧௮. கிருச்சிரம் - பிராயச்சித்த விரதம்; பாபத்தைப்போக்கடிப்பது என்பதுபொருள்; இது பிராயச்சித்-

தமாகிய விரதங்களின் பொதுப்பெயர்; பஞ்சாமிருதத்தோடாறுநாளுண்டு ஏழாநாளுபவாசமிருப்பதாகிய ஓர் பிராயச்சித்தம் என்பாருமுளர். சாந்தபனம் - மூன்றுநாள்பகலிலும், மூன்றுநாளிரவிலும், மூன்றுநாள் அநாசிதமாய்க் கிடைத்தவற்றையும் புசித்துமூன்றுநாள்பட்டினியாயிருக்கும்விரதம்; இதனைத் "த்ர்யஹம்ப்ராதஸ்த்ர்யஹம்ஸாயம், த்ர்யஹமத்யாசிதம், த்ர்யஹம்பராஞ்சநாச் நீயாத், க்ருச்ரம்ஸாந்தபனம்ஸ்ம்ருதம்,, என்பதாலுணர்க. முதல்நாள்தயிர் முதலியவுருவானபதார்த்தங்களையுண்டு, மறுநாளுபவாசமிருப்பதாகிய விரதமென்று கூறுவாருமுளர்; சந்தாபத்தாலுண்டாவது என்பதுபொருள்; கோமூத்திரம், கோமயம், பால், தயிர், நெய், சுத்தஜலம்ஆகிய இவற்றை முறையே நாளொன்றுக்கொவ்வொன்றாய்ப் புசித்து இறுதி நாளிலுபவாசமிருக்கும் விரதம் என்றும் சிலர் கூறுகின்றனர்; ஆறுவிது மனுதர்மசாஸ்திரத்தில் "மஹா சாந்தபனம்,, எனப்படுகின்றது.

௨௦. விகடம் - வேறுபாடு.

௨௩. களபம் - கலவைச்சேறு; யானைக்கன்றுமாம்; பிற்பொருளில் நிரையடைவது என்பது பொருள். துணை - இரண்டு. அந்தரம் - பேதம்.

௨௫. புல்லி - தழுவி. தலைப்பட்டான் - அடைந்தான்.

## ௧௪-வது, சருக்கம்.

———)0(———

௩. நெறித்த - முறிப்புக்கொண்ட. விழிக்கவசமோ - (விழிக்க + வசமோ) பார்க்கமுடியுமோ; (விழி + கவசமோ) நமது கண்களை மறைக்குங்கவசமோ.

௪. கனகன் - இரணியன். சிங்கம் - நண்டுநரசிங்கப்பெருமாள்; அவயவங்களிற் சிறந்து இன்னுரென்றறிதற்குரியதான முகம் சிங்கமுகம்போன்றதாதலின் சிங்கம் என்றமாத்திரை கூறப்பட்டது; அன்றிச் சிங்கம்போன்ற பௌருஷமுடையானைச்சிங்கமெனக் கூறினர் எனினுமாம்; பிற்பொருளில் உவமையாகுபெயர்.

௫. சவுமியப்படிவம் - சாந்தரூபம்.

௭. மகன் - மார்க்கண்டன். மறலி - யமன். சத்தி - சிவசத்தி.

௮. தண்டி - சண்டேசநாயனார். தேவி - மனைவியாகிய திருவெண்காட்டுநங்கை.

௯. "மக்களை,, இது ஒருமைப்பொருளில்வந்த பன்மை; மைந்தர்கள்யாவரும் நாராயணர்களல்லராதலின், "மைந்தனை,, என்றிருத்தல் சிறப்புடைத்தாம். சண்டன் - யமன். அங்கிலன் - சாகரபுரத்தில்வசித்த ஓர்வேடன். சிவகங்குல் - சிவராத்திரி; மாசிமாசத்துக்கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசி இரவு; இது ஓர்விரததினம்.

௰. கொம்மை - அழகு, வட்டம், இளமை.

௧௩. கற்பனை - கட்டளை.

௧௪. பன்னகம் - (பத் + ந + கம்) பாம்பு; பதத்தால் நடவாதது என்பதுபொருள். பட்சியரசு - கருடன்.

௧௫. இன்னம் - மேலும்; இனி யஅழகிய என்றுமாம்; இன்னஎனப் பிரித்து இத்தன்மைய என்றும் பொருள் கொள்ளலாம்.

௧௯. ஒல்லை - விரைவு.

௨௧. அவதியிட்டு - எல்லைவைத்து. கொடு-கொண்டு; தொகுத்தல்.

௨௨. இறைஞ்சி - வணங்கி.

௨௫. தாய் - சந்துவச்சிரத்தை.

௨௬. விறல் - வலிமை. தளை - விலங்கு. பணி - கட்டளை.

௨௮. பேதையவள் - சண்டுச் சாந்தி. அதிர்த்திமகன் - மிச்சாதிட்டி. ஏதம் - துன்பம்.

## ௧௫-வது, சருக்கம்.



௧. விப்பிரமை - ஸ்திரீகளின் சிங்காரசேஷ்டை. மிச்சாதிட்டி - பொய்த்தோற்றம். சீறடி - (சிறுமை + அடி) சிறியபாதங்கள். மருங்கு - இடை. ஒசிய - துவள.

௨. வேத்தவை - (வேந்து + அவை) ராஜசபை. பொன் - இலக்குமி; தங்கமுமாம்.

௪. விரை - வாசனை.

௫. வரையாச்செய்கை - நீதாத் தொழில்.

௭. கறுப்பு - கோபம்; உரிச்சொல்; "கறுப்புஞ்சிவப்பும்வெகுளிப்பொருள" என்பதாலுணர்க.

௮. வால் - வெண்மை.

௯. தகரம் - மயிர்ச்சாந்து. தொடை - மாலை. சிகரம் - மலை, மலைமுடியுமாம். உகிர் - நகம்.

௧௦. பாதாதிகேசமட்டாய் - அடிமுதல் முடிவரை. வாடை - காற்று; அன்றி வாடை மணம் எனக்கூட்டி மிக்கமணம் என்னலுமாம்; இப்பொருளில் ஒருபொருட் பன்மொழி. கட்டாரை - கன்றுறிய கூர்மைபொருந்திய; தாரை - கூர்மை. கொட்டாவி - பெரியஉயிர்.

௧௨. நறை - தேன். கொந்து - பூங்கொத்து.

௧௫. ஆடமேவு - உடுக்கலைகளையொத்த. மணி - பவளம்; அழகுமாம். கோடு - கொள்கொம்பு.

௧௭. முருந்து - (மயிலின்) இறகடி. ஆகம் - மார்பு.

௧௯. நானிலம் - பூமி; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலமுடையது என்பது பொருள்; பண்புத்தொகையன்மொழி.

௨௧. சுகம் - கிளி; சுரிக்கின்றது என்பதுபொருள். மிகத்தோடு பொருவிழி - (மிகம் + அத்து + ஓடு + பொருவிழி) மானோடுபோர்புரிகின்றகண்; (மிக + தோடு + பொருவிழி) காதணியை அலைது, காதையளவு மோதுகின்றகண் என்றுமாம்; மிகம் - (மிருகம்) மான்.

## ௧௬-வது, சருக்கம்.



வளை மலரு ராகுபெயர். நீலவிழியாள் - மிச்சாதிட்டி. கிளியது இதில் அது பகுதிப்பொருள்விகுதி.

ங. நெடுங்கால் - கடுங்காற்று. நாண்மதி - பூர்ணசந்திரன்.

ச. நூபுரம் - பாதச்சிலம்பு ; ஒலிக்கப்படுவது என்பதுபொருள். அகீர்த்திமகள் - மிச்சாதிட்டி.

ரு. இட்டிமை - மான் ; இதனையாதரிப்பவர் முனிவர்கள்.

எ. பொய்யுறுமடக்கொடி - மிச்சாதிட்டி.

கங. போத - போதுமானதாரும்படி.

கச. செல்லாத - (தக்கதென்று) ஒப்புக்கொள்ளப்படாத. வன்கணார் - வைராமுள்ளோர். முனை - முதன்மை. கவரிநாண் - கவரிமானை யொத்தநாணம் ; அதாவது:—கவரிமான் ஒருசிறுரோமம் நீங்கப்பெறினும் உயிர்விட்டுவிடுவதுபோல் நாணம் சிறிதுகெடவரினும் உயிர்விட்டுவிடற்குரிய நாணம் என்க.

கசா. பொறித்தது - அயனூல்நெறியிலாவது, சிரத்திலாவது எழுதப்பட்டது.

கஎ. துவர் - பவளம் ; செம்மையுமாம்.

கஅ. விண்டவர் - பகைவர்.

## கஎ-வது, சருக்கம்.

—:※:—

க. கருணையான் - கருணையென்பானுடன் ; ஆன் ஈண்டு உடனிகழ்ச்சிப்பொருளின்மேற்று. அன்னுள் - (முற்சருக்கத்துக் கூறப்பட்டவளாகிய) அந்தச் சத்துவச்சிரத்தையினுடைய. உறையும் சந்தி, அன்னுள்சந்தி என்க. அது - சத்துவச்சிரத்தை பகைவராற் பற்றப்பட்டனளென்ற பொய்ம்மொழி.

உ. மலங்கி - கலங்கி.

ங. நாணம் - கஸ்தூரி. நாவி - கஸ்தூரிமிருகம்.

அ. அங்கு - விண்ணுலகு.

கக. ஏதிலார் - பகைவர்.

கஉ. கோடி - கொள்கின்றாய் ; முன்னிலையொருமை வினைமுற்று.

கங. பளிங்கன்னபுந்தி - தனக்கென ஓர்நிறமின்றிச்சேர்ந்தவற்றின் நிறத்தையே அடையும் பளிங்கைப்போலத் தனக்கென ஓர்அறிவின்றிச் சேர்ந்தவர்களின் அறிவையேகொள்ளும் அறிவு.

கசா. கோகுலம் - குயில்போன்றசாந்தி ; உவமையாகுபெயர்.

ககூ. சதுர் - நான்கு.

உ0. ஆன்றோர் - பகைவர்.

உங. மேல் - பின்னர் ; இதுகாலத்தின்மேற்று.

உரு. பீலித்தொங்கல் - மயிற்றோகைக்குஞ்சம்.

உசா. பாழ் - நெற்றிக்குறியின்மை.

உஎ. ஆனேர் - (ஆன் + நேர்) பசுவினையொத்த ; பசுவினையொத்தல் பரிசுத்தத்தாலும், பயன்படலாலும், கருணையாலுமென்க. 'இப்பால்,' இதனை அடுத்தசருக்கத்து முதற்பாட்டுடன் கூட்டுக.

## ௧௮-வது, சருக்கம்.



௧. வைப்பு - இடம் (உலகம்). திகம்பரசித்தாந்தம் - சமணநூன் முடிவு.

௨. அவி - நெய். பசு - யாகத்துக்குரியஆடு. விழிபுதைத்தல், கண்டு முட்டுண்டாகாமைக்கும், செவிசேமஞ்செய்தல், கேட்டுமுட்டு உண்டாகாமைக்கும் என்க.

௩. அக்கமாலை - உருத்திராக்ஷமணிமாலை. அக்ஷமாலா என்றவடசொல் விகாரம்.

௪. அலமரல் - துன்பம். அயிஞ்சை - கொல்லாமை; அஹிம்ஸா (ந + ஹிம்ஸா) என்ற வடசொல்விகாரம்.

௫. உறிக்கால் - (நீர்ப்பாத்திரம் வைக்கும்) உறிக்காம்பு. வாமன் - அருகன்.

௬. வாளா - வீணாக; இடைச்சொல். அடிகள் - குரு.

௯. பேழ்வாய் - பெருவாய்.

௧௧. தங்கால்பேர்த்து இதில்தம் அசை: தாம் என்பதன் விகாரம் எனக்கொண்டுதமது எனப்பொருள் கோடலுமாம்: அடுத்தபாட்டில் "வருவானை" என ஒருமையாய் வருதலின். தாலபலம் - பனம்பழம். துவராடை - காஷாயவஸ்திரம்.

௧௩. சவுகதநூல் - புத்தநூல்.

௧௫. வாசனை - பொருளில்வழி யுமுளதாகுமதன்ஞாபகம்.

௧௬. சித்தாந்தம் - தூற்பலவசனங்களைச் சண்டிக்கவல்ல பிரபல வசனம்.

௧௭. செல்வுழி - போகும்பொழுது; இதிலுள்ள வகரம் உடம்படு மெய் அல்லாதமெய். குண்டன் - சமணன்: (நீர்க்) குண்டிகையையுடையவன் என்பதுபொருள். கன்னூற்றுன் - இடத்தையடைந்தான்; பார்த்தான் எனக்கொள்ளற்க; அவன்றன் என்னும் அரும்பெற்றுமைத்தொகையை அடுத்துவந்திருத்தலான்.

௧௮. விறைவற்குவாராய் என்க. சவுகதன் - புத்தன்.

௨௦. பிறழ் - விளங்குகின்ற; வினைத்தொகை.

௨௧. முடை - புலால்நாற்றம்.

௨௨. பிதறல் - கள். கண்டலமர்ந்து - (கண்டு + அலமர்ந்து) கண்டுகலங்கி.

௨௩. 'சமணன்னிது,' இதிலுள்ள 'ன்', விரித்தல்விகாரம்; பின்னும் இவ்வாறு வருவனவையுமறிந்துகொள்க.

௨௪. வல்லே - வன்மையென்னும்பண்படியாய்ப் பிறந்த முன்னிலை யொருமைக்குறிப்புவினைமுற்று. நயமம் - நன்காடு (மயானம்).

௨௭. அபிசாரம் - மாரணஹோமம். ஆகுதி - ஹோமாக்கினியிற் பெய்பொருள். எழுத - கவிப்புண்டாம்படி. பாரணம் - பட்டினிவிட்டுண்ணல்.

௨௮. நாதிக்க - ஒலிக்க; பெயரடியாய்ப்பிறந்தவினை.

௨௯. செம்பி - மூடி.

௩௩. இறைப்பொழுது - க்ஷணநேரம்.

௩௪. இனியவோசை பயத்தற்பொருட்டு இந்திரசாலம்என்பது இந்த்ரசாலம் எனப்பட்டது.

௩௫. மலயங்க - குற்றமாகிய கோயினையுடையவனே; அண்மைவிளி. பாறு - பருந்து.

௩௬. கேளென - நண்பினோர் அல்லது, உறவினர்போல. கேட்பாயாக என்று எனப்பொருள் கோடல்பொருந்தாது; பின்னர் 'எமக்கு' என்

## கஅ-வது, சருக்கம்.



க. வைப்பு - இடம் (உலகம்). திகம்பரசித்தாந்தம் - சமணநூன் முடிவு.

உ. அவி - நெய். பசு - யாகத்துக்குரியஆடு. விழிபுதைத்தல், கண்டுமுட்டுண்டாகாமைக்கும், செவிசேமஞ்செய்தல், கேட்டுமுட்டு உண்டாகாமைக்கும் என்க.

௩. அக்கமாலை - உருத்திராக்ஷமணிமாலை. அக்ஷமாலா என்றவடசொல் விகாரம்.

௪. அலமால் - துன்பம். அயிஞ்சை - கொல்லாமை; அஹிம்ஸா (ந + ஹிம்ஸா) என்ற வடசொல்விகாரம்.

௫. உறிக்கால் - (நீர்ப்பாத்திரம் வைக்கும்) உறிக்காம்பு. வாமன் - அருகன்.

௮. வாளா - வீணாக; இடைச்சொல். அடிகள் - குரு.

௯. பேழ்வாய் - பெருவாய்.

கக. தங்கால்பேர்த்து இதில்தம் அசை; தாம் என்பதன் விகாரம் எனக்கொண்டுதமது எனப்பொருள் கோடலமையாது; அடுத்தபாட்டில் "வருவானை" என ஒருமையாய் வருதலின். தாலபலம் - பனம்பழம். துவாராடை - காஷாயவஸ்திரம்.

கஉ. சவுகதநூல் - புத்தநூல்.

க௩. வாசனை - பொருளில்வழியுமுளதாகுமதன்ஞாபகம்.

க௪. சித்தாந்தம் - துற்பலவசனங்களைக் கண்டிக்கவல்ல பிரபலவசனம்.

கஎ. செல்வழி - போகும்பொழுது; இதிலுள்ள வகரம் உடம்படுமெய் அல்லாதமெய். குண்டன் - சமணன்; (நீர்க்) குண்டிகையையுடையவன் என்பதுபொருள். கன்னுற்றுன் - இடத்தையடைந்தான்; பார்த்தான் எனக்கொள்ளற்க; அவன்றன் என்னும் ஆறும்வேற்றுமைத்தொகையை அடுத்துவந்திருத்தலான்.

கஅ. விறைவற்குவாராய் என்க. சவுகதன் - புத்தன்.

உ0. பிறழ் - விளங்குகின்ற; வினைத்தொகை.

உக. முடை - புலால்நாற்றம்.

உஉ. மிதறல் - கள். கண்டலமர்ந்து - (கண்டு + அலமர்ந்து) கண்டுகலங்கி.

உ௩. 'சமணன்னிது' இதிலுள்ள 'ன்', விரித்தல்விகாரம்; பின்னும் இவ்வாறு வருவதையுய்த்துணர்க.

உ௪. வல்லை - வன்மையென்னும் பண்படியாய்ப் பிறந்த முன்னிலையொருமைக்குறிப்புவினைமுற்று. ஈமம் - சுடுகாடு (மயானம்).

உஎ. அபிசாரம் - மாரணஹோமம். ஆகுதி - ஓமாக்கினியிற் பெய்பொருள். எழுற - கலிப்புண்டாம்படி. பாரணம் - பட்டினிவிட்டுண்ணல்.

உஅ. நாதிக்க - ஒலிக்க; பெயரடியாய்ப்பிறந்தவினை.

உ௯. செம்பி - மூடி.

௩௩. இறைப்பொழுது - க்ஷணநேரம்.

௩௪. இனியவோசை பயத்தற்பொருட்டு இந்திரசாலம்என்பது இந்த்ரசாலம் எனப்பட்டது.

௩௫. மலபங்க - குற்றமாகிய கோயிலையுடையவனே; அண்மைவிளி. பாறு - பருந்து.

௩௬. கேளென - நண்பினோர் அல்லது, உறவினர்போல. கேட்பாயாக என்று எனப்பொருள் கோடல்பொருந்தாது; பின்னர் 'எமக்கு' என்

னும் பன்மையிருத்தலான்.

சா0. அக்கு - எலும்பு. கங்காளர் - உடன்முழுவெலும்பினை ( அஸ்திப ஞ்சரத்தினை ) யுடையோர்.

சக. விரத்தர் - பற்றற்றோர்; விரக்த: என்ற வடசொல்விகாரம். கெழுமி -நிறைந்து.

சஉ. வாத்து - வருதல்; தொழிற்பெயர். சிரத்தை - (இராசதச்) சிரத்தை. கரைந்து -அழைத்து. அலக்கண் - துன்பம்.

சங. சேய் - சிவந்த; செம்மை என்னும் பண்புப்பெயரின் விகாரம். அரி - இரேகை ( கோடு ).

சச. மொய்ச்சு - மொய்த்து; போலி. மூசும் - மொய்க்கும். ஒதி - கூந்தல். மெய்ச்சிரத்தை - சத்துவச் சிரத்தை. 'துன்பம்நீங்கினர், இதிற்றுன்பமென்னும் குணம் மாதரார் என்னும் உயர்திணைப்பெயரொடுசா ர்ந்து உயர்திணை முடிபைப்பெற்றது நன். சூ - ௩௭௭.

சரு. விலைத்தாசிமாதர் - கூலியை விரும்பும் அடிமைத்தொழில் செய்வோர்; விலைமாதரென்று; வேசை மாதர் எனவேறு கூறப்பட்டதாதலின்.

சஎ. இறைஞ்சி - வணங்கி. இரண்டாம்வேற்றுமைத் தொகையில் லகரம் கிரியாதாதலின், தொழிற் செய் என்பது தொழில் செய் எனத் திருத்தப்பட்டது. பின்னுமிவ்வாறு திருத்தப்பட்டுள்ளது.

சகூ. உம்பர் - தேவர்;இடவாகு பெயர். ஆழி - (பாற்) கடல்.

ருO. மாந்தி - குடித்து. இன்ன - இவற்றை; குறிப்புவினையாலணையும்பெயர்.

ருஉ. வாசி - தன்மை; நிமித்தமுமாம். வகுளம் - மகிழம்பூ; ரோகத்தைப் போக்கடிப்பது என்பது பொருள். பதரி - இலந்தைமரம்; ஸ்திரமாயிருப்பது என்பது பொருள்.

பன்னி - பலபடக்கூறி.

ருச. நட்டம் - நடனம்.

ருரு. கயங்கள் - யானைகள்.

ருகூ. எண்டௌங்க - மனங்கலங்கும்படி.

ருஎ. செய்ய - சிவந்த; செம்மை என்னும் பண்படியாய்ப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். சித்தியாயது- கைகூடிற்று. ஊடு - ஏழனுருபு.

ருஅ. அட்டமாசித்தி - அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாம்மியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எண்வகைச்சித்திகள். உம்பர்மாதர் - தேவஸ்திரீகள்.

கூ0. நம் - ( சமணனென்னும் நீயும், புத்தனும், யானுமாகிய ) நம்முடைய. கணிதம் - ஜோதிஷம்.

கூக. வராடிகை - சோகி ( பலகறை); வராடகம் என்ற வடசொல் விகாரம்.

கூச. 'தானமும், இதிலுள்ள உம்மை சத்துவச்சிரத்தைபுக்கதானம் கூறுதலோடு என்னும்பொருளைத்தருவலின், இறந்ததுதழீய எச்ச உம்மை. நாள் - நக்ஷத்திரம்; திதியுமாம்.

கூரு. புராரி - சிவபிரான்; முப்புரங்களுக்குச் சத்துரு என்பது பொருள்.

கூகூ. தங்கை-சத்துவச்சிரத்தை. நங்கை - நமதுகைவசம்.

கூஎ. எண் - தியானம்.

கூஅ. கூறினன், இது கூச-வது கவியிலுள்ள கணிதன் என்னும் எழுவாயின்பயனிலை.

கூகூ. ஏமம் - பொன், புதையல், இன்பம், காவலுமாம்.

எக. இயற்பங்கன் - ஒழுக்கங்கெட்டோன்.

எங. மாயி - மாயம்வல்லாள். புணர்த்தல் - உபாயஞ்செய்தல்.

எச. அட்டகாசம் - பெருநகை.

## கக - வது, சருக்கம்.



க. துன்னார் - பகைவர். துடி - இடைசுருங்குபறை. கறங்க-ஒலிக்க. வடவாமுகத்தழல் - கடலிடை யுள்ள பெண்குதிரைமுகம்போன்ற வடிவினையுடையதோர்தீ; வடவை - பெண்குதிரை; ஊர்வன்றவமுஞற்றும்போதவன்பாற்சென்றநாரதா இயர் ஓர் புத்திரனைப்படைத்தருள்க என, அவன் தனது துடையையோமாக்கினி மேல் நிறுவி யோர்கூர்ச்சத்தாற் குடைந்து, சுவாலாமாலி அல்லது, ஔர்வன் என்னுமோர் புதல்வனை உண்டாக்கிப்பின் பிரம்மன் வேண்டுகோட்கிணங்கி யப்புதல்வனைக்கடலிடையிருந்து, நீர்பெருகியுலகுக்கிடையூறியற்றா வண்ணமதனைப்பருகும்படி கட்டளையிட்டான். அவ்வௌர்வனேவடவைத்தீயாய்க்கடலிடை இருக்கின்றனன்.

உ. அயிறங்கு - ( அயில் + தங்கு ) வேலாயுதந்தங்கிய. புயறங்கு - ( புயல் + தங்கு ) மேகங்கள் தங்கிய.

ங. வடி - கூர்மைபொருந்திய.

ச. தாமம் - ஒளி, மாலையாகிய என்றுமாம்.

ரு. மாயத்தி - வயிரவி. பார்ப்பு - பறவைக்குஞ்சு.

சா. அணியாயவஞ்சி - வயிரவி. சேக்கை- (பக்ஷிகளின்) படுக்கை. வேழம் - விளங்கனிக்குவருவதோர்நோய்; யானையன்று. மதம் என்பதுவேழம் என்னும் சொற்கேற்ற அடை. இதனைத் "தூம்புடை நெடுங்கை வேழம்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளின் நச்சினார்க்கினியர் உரையானுணர்க. அந்து - நெல்வண்டு.

எ. காகோதரம் - ( ராகுகேதுக்களாகிய தெய்வப் ) பாம்புகள்; காக்கையின்வயிறுபோன்ற அல்லது, காகம் என்னும் விசைத்தினையுடைய வயிற்றினையுடையது என்பது பொருள்.

அ. ஆங்கைத - துன்பம்.

கூ. தாழ் - ( முழங்கால்வரையில் ) தாழ்ந்த (தொங்கிய). வெருருபி - வயிரவி.

கo. இதுமுதற் பதினேழுகவிகளைக்கலிவிருத்தமாயுங்கொள்ளலாம்.

கக. சதி - அழிவு.

கஉ. வாரணம் - யானை; ( சத்துருக்களின் பலத்தைத் ) தகைவது என்பதுபொருள்.

கங. தான்மானிடன் - துச்சாதனன்; அரியோதனனுமாம். முன்னேறன் இயற்றுதற்கருத்தா. பின்னேறன் எவுதற்கருத்தா.

கச. கோகனகம் - தாமரைமலர்; கோகநதம் என்ற வடசொல்விகாரம்; சக்கிரவாகங்கள் பேசுதற்கிடமாவது என்பது பொருள். கோதிலர் - ( காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக் ) குற்றங்களுமில்லாதவர்.

கரு. நெகிழாது - தளராமல். பராமுகம் - பாராதிருத்தல்.

உo. பான்மொழி - பால்போலும் மொழியினையுடையளாய சத்துவச்சிரத்தை; உவமைத்தொகையன்மொழி.

உக. அல் - இரவு. தெறும் - அழியும்; தன்வினைப்பொருளில்வந்த பிறவினை. ஞாயிறு எழ, தெறும், அல்லார் இருள்போல் எனமுடிக்க. சன்னாகம் - போர்க்கவசம்.

உரு. ஓதிமம் - அன்னம்போன்ற சத்துவச்சிரத்தை; உவமையாகுபெ

## உக-வது, சருக்கம்.



க. மைத்துனன் - நியாயன்.
உ. உரும் - இடி.
ரு. சோமநாதத்து வந்தோன் - மானனாலனுப்பப்பட்ட ஒற்றன்.
கூ. தங்கை - (தருமன்) தங்கையாகிய சத்துவச்சிரத்தை.
கO. வார் - நீண்ட.
க௩. முறுகு - முதிர்ந்த; வினைத்தொகை. செறுநர் - பகைவர்.
கரு. ஒருப்படுமுன் - சம்மதிக்குமுன். வேள்வி - விவாகம்.
கஅ. நிருபம் - கட்டளைப்பத்திரம். வரவ - கடந்துவர.
உக. பாசத்தார் - அன்பாற்கட்டுப்படுதலையுடையோர்.

உரு. நெஞ்சம், முகமும், கணும் ஆகிய கமலங்கள் என்க. பொன்னும் - அழகுபொருந்திய; இலக்குமி தங்குகின்ற என்றுமாம். பூத்து - மலர்ந்து.
௩O. அருந்திகூர - ஆசைமிக.
௩உ. வதித்த - பெருகிய; தங்கியஎன்றுமாம். முற்பொருளில் வத்தித்த என்பதன் றிருத்தல்; பிற்பொருளில்வதிந்த என்பதன் வலித்தல்.

---

## உஉ-வது, சருக்கம்.



க. சற்சங்கம் - நல்லோரிணக்கம். அவ்வாசம் - நல்லோருடனிருத்தல்; வாசமாகிய சந்தனம் என்க. வாசத்தை இரட்டுறமொழிதலாய்க்கொண்டு மணம் என்றும் பொருள்கொள்க. திமிர்ந்து - பூசி. கேள்வியாகிய குண்டலம் என்க.
உ. வியாசனுவல்சூத்திரம் - பிரம்மசூத்திரம்; இது வேதாந்தசூத்திரம், உத்தரமீமாஞ்சை என்றுங் கூறப்படும். முன்னூல் - முதல் நூல்; அதாவது:- வினையினீங்கி விளங்கியஅறிவின்முனைவனாலாவது அவனருள்வழிப் பட்டோனாலாவது கூறப்படும் நூல்; மேன்மையான நூல்போற்செய்த ஆபரணம் என்றும் பொருள்கொள்க. கோதை - மாலை. வேய்ந்து - அணிந்து.
ரு. அபயப்பிரதானம் - அடைக்கலங்காத்தல். ஆழி - மோதிரம்.
௬. வீக்கி - கட்டி. உத்தரியம் - மேலாடை (அங்கவஸ்திரம்).
எ. நித்திலம் - முத்து.
அ. கடு - விடம். அஞ்சுறுதார் - பயப்படாதவர்களாகிய மோகனுதியர்களுடைய.
கூ. மாலாம் - கருமையாகிய, இருள்தீர்த்து - இருளையொழித்து, உலகெங்கும்வயங்கி - உலகத்தெல்லாம் விளங்கி, யாரும் எலா - எத்தகைமேம்பட்டோரும் ஒவ்வாத, மதியோர்கருத்துக்கும் எட்டாது - அறிவினையுடைய வித்துவான்களுடைய மனதுக்கும் எட்டாமல், உயர்ந்து -

(புகழால்) மேம்பட்டு, மேலாகிவிரிந்து - (தலையின்) மேலாய்த் திறக்கப்பட்டு, ஒடுங்காதவியாபகம் - சிறிதாகாத (மிகப்பெரிய) வியாபித்தல், தன்பாலாம் - தன்னிடம்பொருந்திய, மதியாகிய - (பூர்ண) சந்திரன் போன்ற, வெண்குடை பாங்கிரேறுங்க - வெண்கொற்றக்குடையடக்கத்து உயர; என்க. வியாபித்தல்-குடை நிறைந்திருக்கும்பொழுதுள்ள சுற்றளவைக் குறிக்கின்றது; அன்றிப்புகழான் முழுவதைத்தும் பரவுதலுமாம். மாலாம் - மயக்கமாகிய, யாரும் எலாமதியோர் - எவருந்தமக்கிடாகாத மெய்ஞ்ஞானிகள், வியாபகம் - அகண்டாகாரம், மதியாகிய - ஞானமாகிய, பிறவற்றிற்கு முன்னர்க் கூறியாங்குக்கொண்டு இலேசமைடயாப்பொருள் கொள்க.

௧௪. கதி - மோக்ஷம். விதி - வேதாகமமுறை. நன்னெறி - நல்லபாதை; சன்மார்க்கம்; இலேசமை; முன்னதுகாலாறும், பின்னதுகருத்தாறும், நடத்தற்குரியது.

௧௫. அலர் - (வெண்டாமரை) மலர்; மலர்வது என்பதுபொருள்; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டது. வீறு - சிறப்பு; பெருமையுமாம்.

௧௬. தாரகம் - பிரணவம் (ஓங்காரம்). நாதம் - பிரணவத்திறுதியவயவம்; அகாரமாகிய கலையையுடையது. இரண்டாம்வேற்றுமையுருபும்பயனுமுடன்றொக்க தொகையிரட்டுமாதலின், தார்குழலென்பது தார்க்குழல் எனத் திருத்தப்பட்டது. விதி - இச்செயல்களைபொழித்துநற்செயல்களைக்கூறுவதாகிய, வேதத்தின் ஓர் பிரிவு. அர்த்தவாதம் - ஷட்விதலிங்கங்களி லொன்று; அதாவது:- ஸ்ருஷ்டி, ஸ்திதி, பிரளயம், பிரவேசம், ஸம்யமனம், தத்துவம்பதார்த்த பரிசோதனை, பலம் என்னும் எழாறுந்தாற்பரியம்செய்வது; கடவுளைக்கத்யபத்யங்களாற்றுதிக்கும், வேதத்தின் ஓர் பகுதியுமாம். ஷட்விதலிங்கங்களாவன:—உபக்கிரம உபசம்ஹாரங்கள், அப்பியாசம், அபூர்வதா, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்பவை; இதனை "உபக்ரமோப சம்ஹாரா, வப்பியாசோ பூர்வதாபலம், அர்த்தவாதோபபத்திச, லிங்கம் தாத்பர்ய நிர்ணயே,, என்பதானுணர்க. பனைத்து-பருத்த. பயோதரம்-முலை. பிரகரணம் - அத்தியாயம்.

௧௭. அஞ்சுகோசங்கள் - அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்பவை; கோசம் - உறை. சச்சிதானந்தம் - உண்மையறிவானந்தம். உபபத்தி - ஷட்விதலிங்கங்களில் ஒன்று; அதாவது:— "மண்ணினுலே ,, முதலிய திருஷ்டாந்தங் கூறுவது. உபக்கிரமமுபசங்காரம் - ஷட்விதலிங்கங்களி லொன்று; தொடக்கமும் முடிவும் தம்முள் ஒத்திருப்பது; அதாவது:— "சௌம்மிய! சத்தாகிய துவே முதற்கண்ணிருந்தது ,, என்று தொடங்கி, "இந்த ஜகத்தெல்லாமிதுவே ஆன்மாவாகவுடையது; இது தான் சத்தியம். ,, என்றுமுடிவது. மகாவாக்யம் - வேதங்களின் (நான்கு) மகா வாக்யங்கள்; அவையாவன:-ப்ரக்ஞாப்ரம்மம், அஹம்ப்ரம்மாஸ்மி, தத்வமஸி, அயமாத்மாப்ரம்மம் என்பவை; இவை முறையே ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்பவற்றின் வாக்கியங்கள்.

௧௮. வருணம் - வர்ணக்கிரமம். அலங்காரம் - யமகம், திரிபு,ப்ராசம் முதலிய சொல்லணிகளும்; உவமை, உருவகம் முதலிய பொருளணிகளு

மாம். அலங்காரமாகிய பணி என்க. பிரமாணம் - அளவை ; உண்மையைத் தப்பவத்திற்குச்சிறப்புக்காரணம் ; அவை பிரத்யக்ஷம்முதலியன. விந்து - பிரணவத்திலோரவயவம்; ககாராதி ஙகாராந்தமாகிய பஞ்ச கலைகளையுடையது. சத்தி-உமை. பூருவம் - சுக்லபக்ஷம். சத்தியென்றும் எழில் பூருவமென்றும் ஒளி எனக்கூட்டுக. கீதை - பகவற்கீதை ; இது பாஸ்தானத்ரயத்திலொன்று ; மற்றவை ப்ரம்மசூத்திரமும், உபநிடதங்களுமாம்.

௧௯. கோயில் - அரண்மனை ; இலக்கணப்போலி. ஆதரம் - அன்பு.

௨0. கலை - ஒளி. விதானம் - மேற்கட்டி. சொற்றொடராகிய தொடை ; அணியாகிய விளக்கம் என்க. அளி - கருணை. எற்றிகழ் - பகலிலும்விளங்குகின்ற ; சூரியனைப்போன்றவிளங்குகின்றனென்றுமாம். எழில் - அழகு.

௨௧. ஒல்லை - விரைவில். தாழ்ந்து - வணங்கி.

௨௨. எண்கண்வேதியன் - பிரம்மன். தருதி - ஒருமைப்பேயவல்.

௨௩. விதி - பிரம்மன். உடை - கொண்டிருக்கின்ற.

௨௪. ஆறியன் முனிவர் - (வேதாங்கங்கள்) ஆறினிலக்கணங்களுமுணர்ந்த அல்லது, (பிறர்குற்றத்தைப்) பொறுக்குந் தன்மையினையுடைய மனனசீலர்கள்.

௨௭. அமைவில் - அடங்குதலில்லாத. அதாவது:- யாவராலும் நன்கறியப்பட்ட.

௨௮. ஒண்டரு - ஒளிபொருந்திய. பண்டரு - இராகம்போன்ற. கிளவி - சொல்.

௩0. முளரி - தாமரைமலர் ; முள்ளையுடையதாளத்தையுடையது என்பது பொருள் ; இரண்டாம்வேற்றுமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்த் தாமரையை யுணர்த்திப் பின் முதலாகுபெயராய் அதன் மலரையுணர்த்திற்று.

௩௧. சங்கு - இது பாஞ்சஜன்யமெனப்படும். சக்கரம் - இது சுதர்சனமெனப்படும். பாவு - வியாபித்த; துதிக்கப்படுகின்ற என்றுமாம். புரந்ததும் - காத்ததும்.

௩௨. தெரிக்க - அறிவிக்க ; பிறவினை ; இதன் தன்வினை தெரிய.

௩௩. விசுவரூபம் - பிரபஞ்ச வடிவம்.

௩௪. அம்பரீடன் - இரண்டாம் நாபாகன் மகன். அருள்புரித்தது:- துர்வாசரது சாபத்தினின்றும் பரமபாகவதனான அவ்வரசனைச் சக்ராயுதத்தாற் காத்தது.

௩௫. கரா - முதலை; இழுத்துச் செல்வது என்பது பொருள் ; கிராஹம் என்பதன் விகாரம். தாலம் - பனைமரம். தனிவையம்முன்மெலிதிகழுமாம் என்றபடி கைக்கீட்டு. என்பது கைக்கீட்டு என்று இருத்தப்பட்டது.

௩௮. தவர் - சனகாதி நால்வர்.

௩௯. முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத்தமிழ். வாதவூரர் - மாணிக்கவாசகசுவாமிகள்.

௪௧. சாத்திரம் - சாங்கியம், யோகம், வேதாந்தமென்னும் மூன்று ; வேதாந்தம், வைசேஷிகம், பாட்டம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை என்றுமாறுமாம். இதிகாசம் - உபதேசபாரம்பரையில் வந்த பழைய சரித்திரமொன்றைப் பிரதானமாகவெடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறுவது. இதிகாசவி என்பது இதிகாசமி எனத் திருத்தப்பட்டது.

௪௩. உளம் எழுவாய், செய்தது பயனிலை.

௪௫. தமனியம் - பொன் ; காய்ச்சற்குரியது என்பது பொருள் ; தபனீயம் என்ற வடசொல்விகாரம்.

௪௭. வழுத்தினேன் - சொன்னேன்.

௪௮. தொண்டை - கொவ்வைக்கனி ; முதலாகுபெயர். பின்னை - சீதை.

௪௯. கஞ்சம் - தாமரைமலர் ; முதலாகுபெயர் ; நீரிலுண்டாவது என்பதுபொருள். காலும் - பொழிகின்ற.

௫௧. தீர்த்தர் - பரிசுத்தர். ஓவியம் - சித்திரம்.

௫௨. மகளிரைக்கண்டு மயங்குவதாகக்கூறினும், உற்றுநோக்குமிடத்து ஞானேர்த்தம் புலப்படும். கண்டுகொள்க. குணித்து - கணக்கிட்டு (மதித்து).

௫௩. மனோலயம் - மனது இந்திரியங்களின் வழியாய் விஷயங்களிற் செல்லாது ஒடுங்குதல். தேசிகன் - குரு.

௫௪. தாரை - நீரொழுக்கு. நாண் - நாணமாகிய காப்புநாண்.

௫௫. கால்பிடித்தல் - (சப்ததண்டுலராசிகளிற் கிரமப்படி காலை வைத்தற்காகக் கணவன் கன்னிகையின் வலது) காலைப்பற்றுதல் ; சப்ததண்டுலராசி - ஏழு அரிசிக்குவியல்கள். அன்றி அசுமத்தில் (அம்மிக்கல்லில்) வைக்கும்போது பற்றலுமாம். வெளிகண்டு - அருந்ததியைப் பார்த்து ; வெளி - ஆகாயம் ; அது இடவாகுபெயராய்த் தன்னிடத்துள்ள அருந்ததியென்னும் நக்ஷத்திரத்தையுணர்த்திற்று. விவாகத்தில் அம்மி மிதித்தலும் அருந்ததியை நோக்கலுமுலகியல். இலக்கணத்திரயம் - விட்டவிலக்கணை, (ஜஹல்லக்ஷணை) விடாதவிலக்கணை, (அஜஹல்லக்ஷணை) விட்டும்விடாத விலக்கணை, (ஜஹதஜஹல்லக்ஷணை) என்னும்மூன்று. இலக்கணைத்திரயமாகியமங்கலியம். இலக்கணத்திரயம்- அதத்வியாவிருத்திலக்ஷணம், தடஸ்தலக்ஷணம், சுரூபலக்ஷணம், என்னும் மூன்று ; அதத்வியாவிருத்திலக்ஷணமாவது:— நேதி,நேதி (இஃதில்லை, இஃதில்லை) என்றுதள்ளி எஞ்சிநின்ற பொருள்யாது அஃதான்மா என்பது. தடஸ்தலக்ஷணமாவது:- ஜகத்திற் கிருப்பிடமாயுள்ளதே ஆன்மவஸ்து என்பது. சுரூபலக்ஷணமாவது:- சத்து, சித்து, ஆனந்தம், பூரணம், நித்தியம் ஆன்மவஸ்து என்பது. இது வாசுதேவமனனத்திற் கண்டது.

௫௬. ஏனை - மற்ற. துந்துமி - ஓர்தெய்வப்பறை.

௫௮. நீராயினி - சோற்றோடுகலந்த ஆலத்திநீர். காப்பு - திருநீற்றிரேகை.

௬௧. ஓகை - உவகை.

௬௨. துற்ற - நெருங்கிய.

௬௩. லகரம் தகரத்தோடுமயங்காதாதலின், பொருவில்த என்பது பொருவிற எனத்திருத்தப்பட்டது.

௬௪. சேல் - ஓர்மீன் (கயல்). இனிய - இன்சொற்களை ; குறிப்புவினையாலணையும் பெயர்.

௧௦. கொங்கு - வாசனை.

௧௧. கருதார்-பகைவர். நன். சூ- உ௪உ இன்படி நாட்டின் கண்டங்கள் என்பது 'நாட்டின் கட்டங்கள்,' எனத் திருத்தப்பட்டது. தழீஇ - தழுவி; சொல்லிசையளபெடை.

௧௩. தூன்றோர் - பகைவர்.

௧௪. மட்டு - கள் வாசனை. வார் - நீண்ட.

௨௨. சித்தசன் - மனத்திற் சனித்தோன். திறலோர் - வலியற்றமாத ர்களாகிய பேயினிகள்; இது பிற குறிப்பின்பாற்படும். அவர் - வீவே கரறிபயர்.

௨௩. அன்னவர் - யோகினிகள். மைத்தனையோர் - சுலி.

௨௪. மெல்லியலார் - யோகினி கள். உருகிநிறத்து - உய்ந்திடுத ற்கு; போலி.

௨௫. பொதுமகளிரன்றே பின் னது, பிச்சாதேட்டமையாயினுதும். கணக்கு - ஆசிலாசனை.

௨௮. தனம் - சேனையில்; இத னை நிற்பர் என்பதோடியைக்க.

௩௨. வன்பதம் - சாக்வதமான பரமபதம்.

௩௪. தாதி - தத்துவசிரத்தை. உண்மையா(க) என்றேனும் உண்மை யாய் என்றேனும் பிரிக்கலாம்; முன்னது தொகுத்தல்; பின்னது நன். சூ- உஉ௪இல் மேலென்ற விதியாற் கொள்ளப்படும்.

௩௭. செயிர் - கோபம். கயிர வம் - செவ்வாம்பற்பூ; முதலாகு பெயர்; அன்னப்புள்ளிற்குப் பிரிய மானது என்பதுபொருள்.

௩௮. குணிக்கும் - (முக்காலத்து நிகழ்ந்தன) மதிக்கும். செய்தி - செய்; ஏவல்.

௩௯. பெண்கொடி - ஹரிபத்தி.

௪௦. இறை - கணப்போது. போய் + யாம் - போயாம்.

௪௨. வணங்கினர் - வணங்கி; முற்றெச்சம். கன்னவில் - (கல் + நவில்) மலைபோன்ற; கல் கருவியாகுபெயர்.

௪௩. கான் - வாசனை.

௪௫. உந்தினன் - செலுத்தினே ன்; அன்விருதி புரியனபுருதலாற் றன்மையில் வந்தது.

௪௬. அரியினம் - குரங்குக்கூட்டம்; முன்பாட்டில் உயிரவிவை இத்திருத்தின் பாசமெனக்கூறலா னிவ்வாறு பொருள் கொள்ளப்பட் டது. சித்தைத அறவெறும் படர்ந் தாள் என்றியைக்க.

௪௮. நன். க௪௯-ம், சூத்திரத்தா உரையான் இங்கு காக்கும் என்பது இங்குக்காக்கும் எனத் திருத்தப்பட் டது. கொற்றொடி - வயிரவி; அழ கிய வளையல்களையுடையாள் என் பதுபொருள்; பண்புத்தொகையன் மொழி.

௫௨. அச்சாரவேகம் - அந்த அம் பின்விசை; அ, பலாதி சுட்டெனக. விச்சை - வித்தை.

௫௩. கூறினன் - கூறி; முற்றெ ச்சம். தாழ்ந்து - வணங்கி.

௫௮. அசனைமா - வேகயப்புள் என்றுமிசையறிபறவை.

௫௯. பொத்தி - அடித்து.

௬௦. இலக்கண வழுவின்மையா னும், மதுரைத்தமிழ்ச்சங்கத்து எட் டிப்பிரதியிலிருப்பதானும், உபதிடத் தைதேர் என்பது உபதிடத்தைத் தேர் எனத் திருத்தப்பட்டது.

௬௩. வடிக்கின் - தெரிந்தெடுத் தால்.

௬௭. கடம் - காடு. காத்தி - கா ப்பாய்; ஏவல்.

௬௮. அறுசாரன் - இயல்பின் வந்த அண்மைவிளி. கவர்தி - ஏவல்.

## ௨௫-வது சருக்கம்.



௨. பன்னாகம் - (பல் + நாகம், பல + நாகம்) பற்களையுடைய அல்லது, பலவாகிய பாம்புகள். இன்னுள் என்பது இந்நாள் எனத் திருத்தப்பட்டது.

௬. இன்னல் - துன்பம்.

௰. உழந்தான் - அநுபவித்தான். வேட்டு - மணந்து.

௧௧. அன்னகர் - அந்நகரெனத் திருத்தப்பட்டது.

௧௨. அனக - பாவம் இல்லாத.

௧௩. கடற்கரையுறையுநரோர் - செம்படவர்களும், கப்பற்கொள்ளைக்காரர்களும், பிறருமாம்.

௧௫. இனிது விளங்கற்பொருட்டுப் போல இரண்டும் போலும் எனத் திருத்தப்பட்டன. புயங்ககேதனன் - சர்ப்பக்கொடி படைத்த துரியோதனன். விளிவது - இறப்பது. சாதும் - நிச்சயம்.

௨௨. காந்தையர் - மனைவிகள்; அவராவார்:— தசரதன் மனைவியாகிய கைகேயியும், சந்தனுமனைவியாகிய பரிமளகந்தியுமாம்.

௨௩. இன்னிலம் - (ஈனமில்லாததால்) இனியதாகிய பூமி.

௨௪. ஒருங்கும் - அழியும்.

௨௫. பிணா - பெட்டை. கோடு - விலங்கின் கொம்பு. கடுக்கும் - ஒக்கும்.

௩௩. கபாலி - ஈண்டு வயிரவி. சேறல் - செல்லல்.

௩௫. மென்கொடி - அரியக்தி. கோறல் - கொல்லல்.

௩௬. தாறு - புதர்.

௩௭. சங்கியாது - கணப்படுத்தாமல்.

௩௮. ஆகி தருவரோனுமென்றியைக்க. ஆகி உட்கொளாது என்றுமாம்.

## ௨௬-வது சருக்கம்.



௩. தத்தை - கிளி. சின்னம் - கொடி, குடை முதலிய அடையாளங்கள்.

௭. குமிழ் - முதலாகுபெயராய் அதன் மலரையும் அது உவமையாகுபெயராய் மூக்கையுமுணர்த்தலின், இருமடியாகுபெயர்.

௮. குமுதம் - ஆம்பற்பூ; முதலாகுபெயர்; பூமியிற் சந்தோஷிப்பது என்பதுபொருள்.

௰. அஞ்சுபூ - தாமரை, அசோகு, மா, முல்லை, நீலோற்பலம் இவற்றின் மலர்கள். அஞ்சு - பயப்படுகின்ற, பூ - (ஐந்து) மலர்களென்றுங்கொள்ளலாம்; இப்பொருளில் அஞ்சு வினைத்தொகை.

௧௧. அழற்றேவி - சுவாஹாதேவி. சண்டன் - (கதைக்கேற்பச்) சூரியன், அல்லது யமன் என்று கொள்க; கதைவிளங்கவில்லை. குரு - ஆசாரியனும், குருவென்னும்மறுபெயருடையவனுமான பிருகஸ்பதிபகவான். தாரம் - தாரை. இந்திரன் மைந்தன் - ஜயந்தன்.

கஉ. கன்னி - எட்டுவயதுப் பெண்; குந்திதேவி. கடற்கிறைவன் - வருணன்.

கரு. காளம், குயில். தேர், தென்றல். குடை, சந்திரன். வில், கரும்பு. போது - குமிழ் அல்லது, எள்ளின்மலர். அம்பு, புஷ்பங்கள். அமையும் - போதுமானதாகும்.

கசா. பாவு - பரப்புகின்ற; வினைத்தொகை. பஞ்சவாசம் - இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்பவை; வாசம் பண்பாகுபெயர்.

கஎ. ஆசுரக்கோலம் - சலந்தராசுரனது வேஷம்.

உரு. இஞ்சை - கொலை; ஹிம்ஸா என்ற வடசொல்விகாரம்.

உகூ. போதகம் - யானை. ஆதிமன் - பிரம்மன்.

உஅ. தாய் - இரேணுகா தேவி.

ஙச. சமந்தக விரத்நம் - சூரியனாற் சத்திராஜித்துக் களிக்கப்பட்டதோர் மணி.

ஙஅ. யானையெதிர் - யானையை எதிர்க்கின்ற. கோட்டி - துன்பம்.

சக. அகடு - வயிறு.

சஉ. அதள் - (புலித்) தோல். கவுத்துவம் - பாற்கடலிலுண்டானதோர் மணி. கொண்டல் - மேகம் போன்ற திருமால்; உவமையாகுபெயர்.

சரு. வாசவன் - இந்திரன்; இரத்தினங்களையுடையவன் என்பது பொருள்.

சஎ. சில் - அற்பம்.

சகூ. நாதன் - சிவபிரான். கேதகை - தாழம்பூ; முதலாகுபெயர்; (பரிமளத்தை)அறிவிப்பது என்பது பொருள். கிளத்துதல் - சொல்லுதல். கிளர்த்துதல், கிளத்துதலெனத் திருத்தப்பட்டது.

ருo. பொய் - அச்வத்தாமனிறவாதிருக்க இறந்ததாய்ப் பொருள் தரும்படி கூறியது.

ருங. நீர்மை - தன்மை.

ருச. ஆசு - குற்றம்.

ருசா. சேதிராசன் - சிசுபாலன்.

ருஅ. பன்னி - மனைவி; பத்நீ என்றவடசொல் விகாரம்.

சாக. மகிணஞர் - கணவஞகிய துஷ்யந்தன். பூவை - நாகணவாய்ப் புள், கிளி, அல்லது, குயில்போன்ற மறதி; உவமையாகுபெயர்.

சாஎ. நிருதன் - கும்பகருணன். நித்திரைத்துவம், நித்திரத்துவம் எனத்திருத்தப்பட்டது.

சாஅ. மால் - பெருமைபொருந்திய.

எo. அச்சு - தைத்து; போலி. அரங்கை - துன்பம்.

எரு. மழுவினோன் - பரசுராமன். தாதையார் - ஜமதக்நிமுனிவர். உரிமை - பிதுர்க்கிரியை.

எஎ. கான்முளை - பிள்ளை (வயிரன்).

எஅ. மாதவர் - தாருகவனமுனிவர்கள்.

எகூ. கன்மாடபாதன் - மித்திரசகன்.

அo. கைம்மிகும், கைம்மிகுமெனத் திருத்தப்பட்டது.

அக. ஊரு - தொடை; (வஸ்திரத்தால்) மறைக்கப்படுவது என்பது பொருள். ஈரம் - அன்பு.

அஉ. குறுமுனி - அகஸ்தியர். விருத்திரன் - துவஷ்டாவின் புத்திரன்.

அங. இவறலில் - உலோபமில்லாத; (தனக்கு) உயர்வில்லாத என்றுமாம்.

கச. கோலாகலங்கள் - சம்பிரமங்கள். சிங்கிகொள்ளும் - (வெற்றி கொள்ளலாற்) குதித்துவிளையாடும்.

கஅ. பாகு - பாக்கு. சுருள் - வெற்றிலை.

கக. மேகலை - மாதரிடையிலணியும் எழுகோவைமணி. பூடணங்கள் என்றவிடத்து உம்மைவிகாரத்தாற் றொக்கது.

உக. மடந்தை - காசிராஜன்மகளாகிய அம்பை. குரு - பரசுராமர். அங்கசன் - காமன்.

உஉ. பைம்மறிக்கும் பார்வை - பையின் உட்புறத்தைப் பார்ப்பது போல உடம்பின் மேற்பூச்சை நோக்கி மயங்காமல், உண்ணோக்கி அருவருத்தல்.

உஎ. சதுர் - புத்தி, திறம்.

உஅ. கைம்மிக - அதிகப்பட; கைமிக என்பது கைம்மிக எனத் திருத்தப்பட்டது.

௩௪. முந்துறு - முன்ஜன்மத்திற் செய்த; (யார்விலக்கினும் நில்லாது பயன்றாற்கு) முற்படுகின்ற என்றுமாம்.

௩எ. ஆம் எனவே அமையுமாதலின், என்னுந்தாரம் என்பது என்னந்தாரம் எனத் திருத்தப்பட்டது. என் + அம் + தாரம் - (மரியாதையாகிய) எனது அழகிய மனைவி. ஆம் - ஆகிய.

சக. மிடியாளர் - தரித்திரர்.

சஉ. இறும்போதில் விழுந்தால் எனக்கூட்டி, இறத்தற்குரியகாலத்திலிறந்தால் எனப்பொருள்கொள்க. எங்கே, ஈண்டு இன்மைப் பொருளது. விழாதேயிருக்க - இறவாது உயிருடனிருக்கும்பொழுது. தடுத்தால் - (ஆசையை) விலக்கினால். தலைச்சுமை - (உடன்செல்வதாய) புண்ணிய பாவங்கள்.

சஅ. பின்பெற்றபேரும் - பிற்காலத்து (தற்காலத்துப்) பிள்ளைகளைப்பெற்றநபர்களும். பெறத்தக்க பேறு - அடையத்தக்கபயன். அது அன்றோ - அந்த இறத்தல் அல்லவா.

ருக. குடம்பை - முட்டை; கூடு எனல் பொருந்தாது.

௬ரு. மும்மதம் - கன்னமதம், கபோலமதம், பீஜமதம் என்பவை.

௬௬. மாறன் - அரிமர்த்தனபாண்டியன். பாணன் - பத்திரன் என்னும் யாழ்வல்லோன்.

எக. உடல் (பரிசம்) யானையையும், வாய் (சுவை) சேலையும், கண் (ஒளி) விட்டிலையும், மூக்கு (நாற்றம்) வண்டையும், செவி (ஓசை) அசுணப்பறவையையும் (வாதிப்பதுபோல) வாதிக்கும் தெவ்வர் என்க.

எஉ. கருவூலம் - பொக்கசம் (பொருட்சாலை). திடம் - நிச்சயம். சேமம் - காவல்வீடு.

அ0. அசித்தி - கைகூடாமை. சித்தி - கைகூடல்.

அக. பிரவிர்த்தி - முயற்சி.

அஉ. தகைய - தன்மையது; குறிப்பு வினையாலணையும் பெயர்; தகையது என்பதன் றொகுத்தல். திருதி - உறுதி.

அஎ. அவன் - ஈண்டுப்புனிதை. பெறு - (கணவனைப்) பெற்ற.

கூ0. திமிரம்-இருள் (போன்ற). உமிழ்சினம் - (யாரும் அவமதித்துத்) துப்புதற்குரிய கோபம்; (உள்ளெல்லாம் நிறைந்து இடமில்லாததால் வெளியிலும்) உமிழ்கின்ற கோபம் என்றுமாம்; மிக்ககோபம் என்றபடி.

கூச. இன்மையாம் - அழிதன்மாலைத்தாய; அறமும் அநுபவித்த பின்னர்க் கெட்டுவிடுமாதலின், இன்மையாம் அறம் என்றார்.

கூரு. செய்தபோதினும் தீது, நன்றெனச் சொலற்பாலதோ என்றியைக்க.

கஎ. குரகதம் - ( இந்திரனுடைய உச்சைச்சிரவம் என்னும் ) குதிரை. வெள்ளியம் - ( இந்திரனுடைய ஐராவதம் என்னும் ) வெள்ளையானை.

கஅ. புறவு - ( சிபிசக்கரவர்த்தியைப் பரிசோதித்தற் பொருட்டு அக்கினிபகவான் எடுத்துக்கொண்ட) புறவடிவம். இருந்தவன் - சிபிசக்கரவர்த்தி.

## உஅ-வது, சருக்கம்.



க. நிச்சயத்தால், 'முடியும்,' என எதிர்காலத்தாற் கூறற்பாலது 'முடிந்தது,' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது; காலவழுவமைதி. புகவென்ன - புகக்கடவர் என்று ( விவேகன் ) கூற; புகவென்று என்பது புகவென்ன என மாற்றப்பட்டது. யோகமாகிய குஞ்சரம், வேதமாகிய பரி, தத்துவமாகிய இரதம் என்க.

உ. ஏகநாயகன் - பிரம்மம். விசிகம் - அம்பு; பேதித்துக்கொண்டு செல்வது என்பது பொருள்; இது ஈண்டுப்போர்க்குரிய படையென்னும் மாத்திரையாய் நின்றது. உத்தியோகம் - முயற்சி.

ந. வலவன் - தேர்ப்பாகன். எழுந்த - பலவின்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர்; வினைமுற்றெனல் சிறவாது; பின்வருங்கவிகளிலும் பல, பலகோடி, அநந்தகோடி என முடிதலான் ஈண்டும் அவ்வாறேதேர்கள் பல என முடிதலே சிறப்புடைத்து. நடத்துவனவும், இலாதனவும், போவனவும், சேர்வனவும், எழுந்தவுமாகிய தேர்கள் பல என முடிக்க.

ச. சினமாகிய வனம், லோபமாகிய வோடை, ஞானமாகிய யானை என்க.

ரு. இது சிலேடை. சிதை - (பகைவரை) அழிக்கின்ற, வில் - வில்லினையுடைய, மேலவர் - மீதே நிகழ்த்தும் போர்வீரர்களது, கருத்துணர்ந்து - அபிப்பிராயத்தை அறிந்து, அனையர் - அப்போர்வீரர்கள், செல்லவிட்ட நெறி - செல்லும்படி விட்ட வழியில், சென்று - போய், ஓர் ஐங்கதிவிடாது - ஒப்பற்ற மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி என்னும் ஐந்து கதிகளை விடாமல், எவையும் மாயநெறி - ( ரதம், கஜம், துரகம் முதலிய ) எவையும் அழியும்படி அமைத்து, முழுஞானம் - பூர்ணஞானம் போன்ற ( வெண்மையான ), வாயின் நுரைகக்கி - வாயிலிருந்துண்டாகும் ( விலாழி ) என்னும் நுரையைக் கக்கி, வந்தெதிரும் - வந்து எதிர்க்கின்ற, வாதியரை - போர்புரிவோரை, வாய்அடக்கி - (தமது) வாயிற் கவ்வியடக்கி, மறைஎழிசைக்குரலெழுக்கலித்து - வேதத்தையும் எழுவகைப்பட்ட இசையையுமொத்தகுரல் எழும்படி கனைத்து, அதிரும்வாசிகள் - குமுறுகின்ற குதிரைகள், மற்றவை வெளிப்படை. சிதை, வினைத்தொகை. வாது - சண்டை; அதனையுடையோர் வாதியர். எழுந்துசென்றனவாகிய அதிரும் வாசிகள்

என முடிக்க. சிதைவு - குறைவு அல்லது கேடு, இல் - இல்லாத, மேலவர் - மேன்மையையுடையபெரியோர்களால், கருத்து - அபிப்பிராயம், உணர்ந்து - அறியப்பட்டு, அந்நெறியர் செல்லவிட்ட நெறிசென்று - அப்பெரியோர் செல்லும்படிவிட்ட (உதாத்தம்முதலியசுரங்களின்)வழியிற்போய், ஓர் ஐந்தி - (செவியாதியிந்திரியங்களாகிய) ஐந்து வழிகளிலும், விடாது - (மனதை) விடாமல், மாயம் எவையும் நூறி - பொய், வஞ்சகம் அல்லது, தீமைகள் எவற்றையும் அழித்து, முழுஞானவாயின்உரைக்கு-பூர்ணஞானத்தைத் தருகின்ற மெய்ம்மையான இனிய சொற்களைப் பொழிந்து, வந்து எதிரும் வாதியரை - வந்து மாறுபடுகின்ற மத வாதியர்களை, வாய் அடக்கி - (பேசாவண்ணம்) வாயை அடக்கி,எழிசைக்குரல் எழக்கலித்து திரும் மறைவாசிகள் - எழிசைகளையொத்த குரல் எழும்படி ஓதப்பட்டு முழங்குகின்ற வேதங்களாகிய குதிரைகள், அனந்தகோடி என்க. க-வது, கவியில் 'வேதவான் பரி, என்றிருத்தலால், இவ்வாறு பொருள் கொள்ளப்பட்டது.

௫. நவிற்றும் - கூறப்படுகின்ற. அதிசயத்திறல்- (அதிசயம் + திறல்) (யாரும்)வியக்கத்தக்க வலிமை; (அதி + சயம் + திறல்) மிக்கவெற்றியைத் தருகின்ற வலிமை.

௭. அவண் - அச்சக்கரதீர்த்தத்தில்.

௧௫. உபயநற்கோயில் - சிறந்த சிவ விஷ்ணுவாலயங்கள்.

௧௮. அவர்க்குச்சேய் ஆயினோர் என்க. ஆதுலர் - தரித்திரர்.

௨௫. பாதகர் - இயமன்.

௨௮. முருங்க - அழிய.

௨௯. விந்துமாதவன் - சத்தியாகிய மாதினையுடைய அந்தச் சிவபிரான்; (சிவனுக்குச்) சத்தியாய் நிற்கும் விஷ்ணு எனினுமாம்; இந்துமாதவன் எனப்பிரித்துச் சந்திரனைத்தரித்த சிவபிரான் என்றுங்கொள்ளலாம்.

## ௨௧-வது, சருக்கம்.

———)○(———

௧. கட்டுணை - (கண் + துணை) கண்கள் இரண்டும்.

௪. எங்க - ஒலிக்க.

௮. சிற்றமாகிய யானை, குடிலமாகிய பரி, திறலாகிய தேர், அதிர்மொழியாகிய பறை, புருவமாகிய சாபம், விழியாகிய கணைகள் என்க.

௧௦. வளாகம் - இடம்.

௧௮. சோரி - இரத்தம்.

௧௯. மேல்பால் - எதிர்முகம். நாடித்தது இடத்தோள் எனப்பிரிக்க; நன். ௯- ௧௯௪ இல் கெடும்என்றது ஓடும் என்றமையாற் குற்றியலுகரம் சில இடங்களிற் கெடாமல் உடம்படுமெய்பெற்றும்வரும்.

௨௩. தனு - உடலாகியவில்; இரட்டுற மொழிதல்.

௨௫. குலிசம் - வஜ்ராயுதம்; மலையி (னிறகுகளை) அறுத்தது என்பது பொருள்.

௩௭. தும்பை - பகைவரோடு போர்புரிவோர் அணியும் மாலை.

௩௮. மீ - மேல். பவம் - பிறப்பைத் (தருகின்ற).

## ௩௦-வது, சருக்கம்.



௧. நாந்தகவுழவர் - (பகைவரது மார்பாகியவயலை) வாளாகிய (உழு படையால் உழுகின்ற) உழவினையுடையோராகிய போர்வீரர்.

௩. மதமாக்குன்று - மதம் என்னும் பெரியமலைபோன்ற யானை ; மாக்குன்று, அடையடுத்த உவமையாகுபெயர்.

௭. சுசனன் - அழுதிலன்.

௧௦. மெய்ப்புலத்துஅண்டு - உடம்பினிடத்திற்சேர்ந்து ; உண்மையான இடமாகிய (மோக்ஷத்திற்) சேர்கின்ற என்றும், மெய்ஞ்ஞானமடைதற்குரிய என்றுங் கொள்ளலாம்.

௧௧. பன்னகாதிபர்க்கு - ஆதிசேஷனை ; உருபுமயக்கம். பவனன் - வாயுபகவான்.

௨௧. பிந்துஅனையும் - மயக்கம் கலந்து.

௨௨. மஞ்சா-மகனே ! மைந்தா என்பதன் போலி.

௨௩. ஒடு உடனிகழ்ச்சிப்பொருளதாதலின், பிரிந்தாரெனை என்பது பிரிந்தாவெனை என்று திருத்தப்பட்டது.

௨௫. குணம் - வில்லிடைக் கயிறு.

௩௫. கருப்புவினாண் - (கரும்பு + வினாண்) வண்டாகியநாண் - வில்லிடைக்கயிறு. விசிகப்புட்டில் - அம்பறாத்தூணி.

௪௦. கட்கம் - வாள் ; துண்டித்தற்குக்(கருவி)என்பது பொருள்.

௪௧. மதாசலம் - மதத்தினையுடைய மலைபோன்ற யானை ; அடையடுத்த உவமையாகுபெயர். வயிராக்கியமாகிய மதாசலம் என்க.

௪௨. லகரி - கஞ்சா, அபின்முதலிய மஸ்துள்ளபதார்த்தங்கள். லகரியாகியசாமரம்என்க. இபம் - யானை.

௪௩. அடக்கன் மதனை நிச்சயமாய்ச் சிரமமின்றி வெல்வான் என்பதைக் குறிப்பிறுணர்த்துதலால், மதனை விந்தகிரி, கடல் என்றுமிவற்றோடும், அடக்கனை மலயத்தந்தனோடும் உவமித்தது வியக்கத்தக்கது.

௪௮. கேசரி - சிங்கம் ; பிடரிமயிரையுடையது என்பதுபொருள்.

௫௧. இவுளி - குதிரை.

௫௨. கவி - குரங்கு ; கவித்துக் கொண்டிருப்பது என்பதுபொருள். விபுதசேனை - தேவர்படை.

௫௩. இக்கு - கரும்பு ; இச்சிக்கப்படுவது என்பது பொருள் ; இக்ஷு என்ற வடசொல்விகாரம். மலயமாருதம் - பொதிகைமலையிலிருந்துண்டாகும் (தென்றற்) காற்று. சிந்துரமா - இருளாகிய யானை ; மா - விலங்கின் பொது ; ஈண்டுயானை என்னும் பொருளது.

௬௦. போதகக்கைகள் - ஞானமாகிய கைகளையுடையோர். கணைகள் - அம்புகள்போன்ற கண்கள் ; உவமையாகுபெயர்.

௬௨. செங்கைவாள் - சிவந்த கையிலுள்ள வாளாயுதம் ; செம்மையான ஒழுக்கமாகிய வாளாயுதம் ; சிலேடை.

௬௩. சருவுதல் - மருவுதல் ; கொஞ்சுதலுமாம்.

௬௪. வேழம் - கரும்பு.

௭௮. விபரீதபாவனை - அசத்தாகிய ஜகத்தை சத்தாய்த்தோன்றுதல்; இது பிரதிபந்தகம்மூன்றிலொன்று. அசம்பாவனை - பிரதிபந்தகம் மூன்றிலொன்று ; அதாவது :— ஜீவன், ஈச்வரன், ஜகத்து, என்றுமிவை தம்முள் வேறுபடுதலின், அத்வைதம்யாங்ஙனம் பொருந்தும் என்னும் உணர்வு.

## ௩௧-வது, சருக்கம்.



க. கோடி - நெறிதவறி. கலிப்ப - ஒலிக்க; இது உடனிகழ்ச்சிப்பொருளதாதலின், நிகழ்காலம் காட்டும்; அடுத்த கவியில் உற்றுன்என்பதோடியையும். உலகாயிதன் - உலக இன்பமேசிரேஷ்டமானது என்றுகூறும் நிரீச்வரவாதி; இஃதும் அடுத்தகவியில் உற்றுன் என்பதோடியையும்.

உ. நாகம் - ஆகாயம்; பாவமில்லது, என்பது பொருள். மேதினி - பூமி; (மது கைடவர்களுடைய) நிணத்தால் நனைக்கப்பட்டது என்பது பொருள். பொன்னகத்து - (பொன் + ஆகத்து) அழகிய அல்லது, பொன்னலாகியஆபரணங்களை அணிந்த மார்பின் கண்ணுள்ள; (பொன் + நாகத்து) எனப்பிரித்து பொன்மலை (மேருமலை) போன்ற என்னலுமாம். என்னை - எப்பயனுண்டாகற்கு.

௩. கொளுவி - தொடுத்து. அற்றம் - அழிவு. வார் - நீண்ட. இகலி - எதிர்த்து. அடுபோர், வினைத்தொகை.

௪. செஞ்ச - முற்ற. செவ்வி - அழகு. நெஞ்சுபறைபறைதல், அச்சத்தாலுளது. வஞ்சினம் - சபதம்.

௫. பண்பட்ட - இராகம்போன்ற. உருமனைய - இடியையொத்த. விதண்டாவாதி-தன்கோட்பாட்டைத்தாபியாது பிறர் கோட்பாட்டை மறுப்போர்; வி - மாறுபாடு; தண்ட - (சொல்லால்) அடித்தல்.

௬. மூண்ட - கூடிய. மனமாதி - மனம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவை. காட்சி - பிரத்யக்ஷப்பிரமாணம்; அதாவது:- செவி முதலியபொறிகளாற் சத்தம் முதலிய புலன்களையறிதல். அநுமானம் - கருதலளவை; அதாவது:- புகைமுதலிய குறிகளான் மலை முதலிய இடங்களிற் தீமுதலியவற்றின் இருப்பையுணர்தல். உபமானம் - உவமையளவை; அதாவது:- கவயமா பசுப்போல் என அறிதல். யாவும் - (ஆகமம், அருத்தாபத்தி, ஐதிஹ்யம், அபாவம், சம்பவம், பாரிசேஷம், இயல்பு எனப்படும்) எல்லாப் பிரமாணங்களும்.

எ. செவ்விதின் - தெளிவாக. பூதம் - ஆகாயமொழிந்த நான்கு. கடினசீதம் - வன்மையும் தண்மையும்; இவை முறையே நிலநீர்களின் குணம்.

அ. கால் - காற்று. இரதம் - சுவை. ஊறு - பரிசம். இவை - இப்பூதங்களும், அவற்றின்குணங்களும். புணர்ப்பு - கூடுதல் (சையோகம்).

௯. உருக்கள் - வடிவங்கள். உறுபுணர்ப்பு - பொருந்திய (அளவுறுத்த) சையோகம். உறுஎனவே உருப்(புணர்ப்பும்) உளவெனக்கொள்க. மைந்து - அழகு; வலிமையுமாம். கடாதி - குடம் முதலியன; வடமொழித்தீர்க்க சந்தி. வருமா - வருமாறு; விகாரம். உந்தி - உயர்ந்து. வாரி - தண்ணீர்; (மேடுபள்ளங்களை)மறைப்பதுஎன்பது பொருள்.

௧0. ஓர்பூதம் - ஒப்பற்றவாயு; ஏதேனும்ஒரு பூதம் எனப்பொருள்கோடல் முன்னோர் வழக்குக்கிழுக்காம்; இதனைச்சிவஞானசித்தியார் பரபக்ஷம், உலகாயதன் மறுதலை ௫-வது, கவியில் "பூதமதொன்று பிரிய" என்பதனுமையா னுணர்க. செறி - நெருங்கிய; வினைத்தொகை. ஆதி - காரணமாகிய (பூதங்கள்).

௧௧. பின்னவைக - கண்டன வேறுபாடு. அணி - படைவகுப்பு. வாகை - வெற்றி. வாள் - கொடிய; இலக்கணை.

௧௨. இது, உலகாயதன் இல்பொருள் என்பவற்றைத் தொகுத்துச்சுட்டுகின்றது. கோடு - கொம்பு. வந்தி - மலடி. வகையாம் - விதத்தினையொக்கும்; அதாவது:—முழுதும் அசத்தாம் என்றபடி.

௧௩. இதுமுதல் ஆறு கவிகள், மேற்செருத்துச் சுட்டியவற்றை வகுத்துக் காட்டத்தொடங்கி, முதல்நான்குகவிகள், வினை இல்லை என்பதையும், ஐந்தாங்கவி, ஆன்மா இல்லையென்பதையும், ஆறாங்கவி, கடவுள் இல்லை என்பதையும் தடைவிடையுள்ளதாகச் சாற்றுகின்றன.

௧௪. வை - வைக்கோல். நன்று - நெருங்கிய. இட்டம் - (வையுந் தழையும்) போடப்பட்ட (வயலாகிய) இடம்; உபமேயத்தில், (கன்மங்கள்) செய்யப்பட்ட இடமெனக் கொள்க; இட்டவிடம் என்பதன் தொகுத்தல். பலன் - (உணவு ஞானமாய்ப் பின்னருண்டாகும்) பிரயோஜனம்; பலம் என்றபடி.

௧௫. அது - மதியுருவும் ஒவ்வாதவகை. இகரத்தின்முன் வலி உம்மைத்தொகையில் இரட்டாதேனும் இன்னோசை பயத்தலான், மிகுதிக்குறைவு என்பது மிகுதிகுறைவு எனத் திருத்தப்படவில்லை; 'க்,' விரித்தல் விகாரம் என்க.

௧௬. குழைவு - இளக்கம்.

௧௭. புரை - உட்டுளை. அளவோதுதலாமே - அளவு ஓதுதலே யொக்கும்; ஆமைமயிரும், முயற்கோடும், உள்ளன என்றலே பெரும் பொய்யாம்; பின் அவற்றின் அளவும் கூறுதல் மிகப் பெரும்பொய்யாம் என்றபடி.

௧௮. இருவேறியல்பு - (உருவும் அருவுமாகிய) தம்முள் மாறுபட்ட இருவகைத்தன்மை. பொருப்பு - மலை.

௧௯. அதனால் - அன்னத்தால். பின்னம்பின்னமாய் - வெவ்வேறாய். பெற்றி - தன்மை.

௨௦. வல்லே - சாமர்த்தியத்தை; முன்னிலையொருமைக்குறிப்புவினைமுற்று; வினாவில் எனக்கொண்டு வலக்கைதா என்பதோடியைத்தலுமாம். வாமி - வாமமதத்தோய்; அன்மைவிளி. வலக்கைதால், மகிழ்ச்சியால்; உறுதியின் பொருட்டுமாம். என்ன வலக்கைதா என்றியைக்க. வேரி - கள்.

௨௧. பாகத்தில் - (உமாதேவியின் வலது) பக்கில்; (அனாது இடது)பக்கில் எனல்பொருந்தாது; பதித்து முதலிய எச்சங்களைப்போலக் கலந்து, என்பதையும் அரன் றொழிலாய்க்கோடல்வேண்டுதலின். வலாரி - இந்திரன்; வலன் என்பானது சத்துரு என்பது பொருள். பாகத்தில் இதிலுள்ள இல், ஐந்தனுருபு; ஏதுப்பொருளது.

௨௨. அமை - மூங்கில். அலத்தகம் - செம்பஞ்சு. அலர்த்தக அலத்தக எனத்திருத்தப்பட்டது. சுவடு - அடையாளம். புலவி - ஊடல்; கலவியின் முதலே. தரணி - பூமி; (வீச்சைத்) தரிப்பது என்பது பொருள்.

௨௩. இந்து காந்தம் - சந்திர கிரணம் படில் நீர்கால்வதாகிய சந்திரகாந்தக்கல். அமளி - மெத்தை. கரணங்கள் - (போகத்திற்குரிய) கரணங்கள்; அவையாவன:- ஆலிங்கனம் எட்டும், அதரபானம் பதினெட்டும், அலிர்தம் பதினாறும், நகக்குறி எட்டும், தந்தக்குறி எட்டும், குரல் எட்டும், தாடனம் எட்டு

மாகிய அறுபத்து நான்குமாம். எதிலர் - பகைவர்.

உஎ. கரி - சாக்ஷி. தொண்டை - கொவ்வை.

உஅ. மாழை - பொன். சூழி - உச்சி. கோழையர் - பயங்கொளிகள்; (தவக்)குறைவையுடையோருமாம். குணபம் - பிணம்; (தனஞ்சயனென்னும் வாயுவால் உண்டாகும்) சப்தத்தைக் காப்பது என்பது பொருள்.

உகூ. பொதுளல்செல்லா - நெருங்காத. குளித்த - படிந்த.

௩0. சாதி - பெண்களின் வகை; அவையாவன:- பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்பவை. தருமங்கள் - குணங்கள். இகத்தே - இம்மையிலேயே. துய்க்கும் - அநுபவிக்கும்.

௩௧. புரோகிதன் - புரோகிதனாகிய பிருகஸ்பதி பகவான்; (சாந்திகபௌஷ்டிகாதிக் கிரியைகளில்) முன் வைக்கப்படுவோன் என்பது பொருள். மடுப்பான் - நிறைக்கும் பொருட்டு.

௩௨. இது முதலிய கவிகள், உலகாயதனைத் தார்க்கிகன் மறுப்பதைக்கூறுகின்றன. அவற்றுள் முதல் மூன்று கவிகள், மேல் கூ-வது, கவியில் "அநுமானமுபமானமுதல் யாவும் வேண்டுகிலம்,, என்றதிலடங்கிய 'அநுமானம் வேண்டுகிலம்,என்பதை மறுக்கின்றன.

௩௫. நெருநல் - நேற்று. ஓ, எதிர்மறை.

௩௬. அதும் முன் காட்சி (ஆதலின்)காட்சியேல்எனக்கூட்டித்"(தார்க்கிக! நீ அநுமானமென்று கூறிய) அஃதும் முன்காக்ஷியே (பூருவக்காக்ஷி) ஆதலின், காக்ஷிப்பிரமாணமேயாம் (அநுமானமன்று),, என்று உலகாயத! நீ கூறுவையேல் என்க. பூட்சி-சையோகம். போதம் - அறிவு.

௩எ. இது, ஆகமப் பிரமாணம் உள்ளதென்கின்றது. மருத்துநூல் - (மருந்து + நூல்) வைத்தியசாஸ்திரம்.

௩அ. இது,மேல் அ-வது, கவியில் "நித்தமிவை,, என்றதையும், கூ-வது, கவியில் "கடாதிமண்ணில் வரும்,, என்றதையும் மறுக்கின்றது. (உலகாயத! நீ) "பூதங்கள் நான்கும் அழிவற்றன.,, என்றாய். (அவை) வடிவங்களோடு பொருந்தி உற்பத்தி விநாசங்களை யடைதலால் (அழிவனவாம்). ("மண்ணுற்குடம் முதலியன உண்டாதல் போலப் பூதக்கூட்டத்தால் வடிவங்கள் உண்டாம்,,) என்றனை. மண்ணுற்குடமாதியயற்றுங் குயவனைக் காண்கின்றோம். (அதுபோலப்)பூதங்களால் வடிவங்களைப் படைப்போரையும் இருப்பதாய் ஒப்புக்கோடல்வேண்டும்; (எ-று.) அழிவன என்பது வருவிக்கப்பட்டது. நீதியாளர் - நியமிப்போர்; முறைமையை யுடையோருமாம்; அகலிகை, பகுதி, தொகுப்பு என்பவை இரண்டாம் எழுத்துக்கெட்டு ஆதி நீண்டு ஆலிகை, பாதி, தோப்பு எனவருவது போல நியதியாளர் என்பதும் இரண்டாம்எழுத்துக்கெட்டு ஆதிநீண்டு நீதியாளர் என வந்தது என்க.

௩கூ. இது, மேல் கூ-வது, கவியில் "புந்திகுணம்வண்பொறிபுலன் களுமவற்றின் உந்தியெழும் வாரியினுறுங் குமிழியொத்தே,, என்றதை மறுக்கின்றது. (உலகாயத! நீ "நீரின்கட் படைப்போரின்றிக் குமிழிஉண்டாவதுபோல,உடலின்கண்ணும் படைப்போரின்றிப் புந்தி, குணம், பொறி, புலன் என்பவை உண்டாம்.,, என்றாய்). நீரிற்றோன்றுங் குமிழி காற்றாலுண்டாம். (அதுபோல உடம்பிற்றோன்றும் புந்தி முதலியனவும் ஒரு கர்த்தாவாலுண்

டாக்கப்படும்). (நீரிற்) றோன்றிய குமிழி நீர்மயமேயாம். (அதுபோலச் சடமாகிய பூதங்களும்) பூதங்களாய்ச் சனிக்கவேண்டுமேயன்றிச், சித்தாகிய அறிவாய் உதித்தல் பொருந்தாது. "அற்றன்று வெற்றிலை முதலியன தம்மிற்கூடின் முன்னில்லாததோர் செந்நிறந் தோன்றுதல் போலப் (பூதங்கள் கூடின் முன்னில்லாது) புந்தி முதலியன உண்டாம்.)" என்று உலகாயத! நீ கூறுவையேயல், (செந்நிறம்) பிரியாதிருத்தலைப்போல (அறிவு முதலியனவும் பிரியாதிருத்தற் பாற்று. அறிவு பிரிதலுறுதலைத்தது ஆதலின், பூதக் கூட்டத்தாலறிவு முதலியன உண்டாமென்று நீ கூறுவது பொருந்தாது); (எ-று.) புற்புதம் - குமிழி. சாரும் அங்கு அதும் - (நீரிற்) பொருந்திய அக்குமிழியும். அன்னது ஆம் - அந்நீர்மயமேயாம். பூதமாச் சனியாது - பூதங்களாகச் சனிக்குமேயன்றி. நீறு - சுண்ணாம்பு. அடை - வெற்றிலை. காய் - பாக்கு. சீர்வது - பிரிதல். உவமையங்கள் விரிக்கப்பட்டிருக்கின்றன.

௪௦. இது, முற்கவியில் "நீறடையுடன்காய்சேரின் சிவப்பெழும்" என்றதைத்தழுவி விராத்துரன் மறுக்கின்றது. அப்படியே (வாயுப்பூதமடங்கிய) வெற்றுடம்பினும் அறிவுண்டாதல் வேண்டும். (அங்ஙனம் அறிவுண்டாதல் இன்று. மேலும் வெற்றிலை முதலியவற்றின் கூட்டத்துச் சிவப்பு ஒன்று மாத்திரமே யுண்டாகின்றது. அதுபோலப் பூதக்கூட்டத்தும் அறிவு ஒன்று மாத்திரமேயுண்டாதல் வேண்டுமேயன்றி) வேறாகிய குணம், பொறி, புலன் என்பவை உண்டாதல் கூடாது. (பின்னும்) வெற்றிலைமுதலியவற்றைப் பிறன் கூட்டுவதுபோலப் பூதங்களைக் கூட்டற்கும் ஓர் கருத்தா வேண்டுமென்பது போதரும். (ஆதலின், இவ்வுவமைக்கின் கருத்துக்கேலாது); (எ-று.)

௪௧. (உலகாயத! நீ) "சிலந்திப்பூச்சியினிடத்து (முன்னில்லாததால் பின் உண்டாவது) போல உடம்பின்கண்ணும் முன் இல்லாதனவாகிய உண்டி முதலியனவும், ஐம்பொறிகளும் (பின்) உண்டாம்," என்பாயேல், ஆகாயத்தினின்று மற்றவையுண்டாதலையும் நீ கண்டதாகவே ஒப்புக்கொள்ள நேரிடும். "(அற்றன்று அவை) பூதங்களின் கலப்பாலாம்," என்பாயேல், (அக்கலப்பு) ஓர் இயல்பு (ஒருதன்மையானது). (ஆதலின், பெண், ஆண், அலி முதலிய வேற்றுமைகள் உண்டாகக்கூடாது. அவ்வேற்றுமைகளை நாம் காண்கின்றோம்); அவற்றின் (காரணத்தை) விவரித்துச்சொல் ; (எ-று.) உண்டியாதி - உணவு, துயில், பயம், மைதுனம் என்பவை. உலூதை - சிலந்திப்பூச்சி. யோனிவேற்றுமை - பிறப்பு வேறுபாடு.

௪௨. இதுவும் "பூதங்களின் கலப்பு," என்றதையே மறுக்கின்றது. (மேலும்) ஓரறிவு, ஈரறிவு, மூவறிவு, நாலறிவு, ஐயறிவு, என்னும் அறிவின் வேறுபாடும், (அதற்கேற்ற) பொறிகளின் நிறைகுறைகளும், பிராமணாதி சாதிகளும், உண்டாதல் கூடாது. அங்ஙனமே பூதம் குணம் முதலியன செறிந்து பூதங்களாலுண்டாகா; (ஆதலின், பூதக்கலப்பெனல்பொருந்தாது); (எ-று.) வண்ணபிரண்டில் முன்னது, சாதி. பின்னது, எழுத்து. வினைமுற்றின்முன் வலியிரட்டாதாதலின், வந்திடாப்பொறி என்றது வந்திடாபொறி எனத் திருத்தப்பட்டது. ஐயறிவு - ஸ்பரிசாசகந்த ரூப சப்தங்கள். நான்கு - சப்தமொழிந்தவை. மூன்று - ரூபசப்தங்களொழிந்தவை. இரண்டு - கந்தரூபசப்தங்களொழிந்தவை. ஒன்று - ரசகந்த ரூபசப்தங்கள் ஒழிந்தது.

௪௩. (உலகாயத! புந்தி, குணம், பொறி, புலன்கள் என்பவை

